# வியங்கோள்

By

V. VENKATARAJULU REDDIAR,
*Junior Lecturer in Tamil*

**தோற்றுவாய்.**—தமிழ்மொழியில் உள்ள இலக்கணங்களுள் மிக்க பழமையதாகிய தொல்காப்பியத்தில் வினைச்சொற்களின் வகைகளுள் வியங்கோள்வினை கூறப்பட்டுளதேயன்றி, ஏவல்வினை யென்பதொரு வகை கூறப்படவில்லை. ஏவல் என்னுஞ் சொற்றானும் எழுத்ததிகாரத்துள் உயிர்மயங்கியலில் [1]'ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்' என்னும் ஓரிடத்தில் மட்டும் வந்துளதேயன்றிச் சொல்லதிகாரத்தில் யாண்டும் வந்திலது.

ஏவல்வினை நன்னூல் முதலிய பிற்கால இலக்கணங்களிற் கூறப்பட்டுளது. வியங்கோள்வினையின் இலக்கணம் தொல்காப்பியத்திற் கூறியிருப்பதற்கு மாறாகக் கூறப்பட்டிருக்கின்றது.

**தொல்காப்பியனார் கொள்கை.**—முதற்கண், வியங்கோளைக் குறித்து ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியிருப்பதனை நோக்குவோம்: ஆசிரியர், [2]'முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி' என்னுஞ் சூத்திரத்தில் இருதிணைக்கும் உரிய பொதுவினைகளைக் கூறி, அடுத்த இரண்டு சூத்திரங்களில் முன்னிலை யொருமைபன்மை வினைகளைத் தெரித்து, அதன்பின்

> [3]'எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
> ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே'

என்னுஞ் சூத்திரத்தால், வியங்கோள் முதலிய எழுவகை வினைகளும் ஐம்பால் மூவிடங்கட்கும் உரிய என்று விதித்து, அதனை யடுத்து,

> [4]'அவற்றுள்
> முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடு
> மன்னா தாகும் வியங்கோட் கிளவி'

1. உயிர்மயங்கு 8.
2. வினையியல் 23.
3. வினையியல் 26
4. ,, 27.

என்று, எய்தியதனை விலக்கியுள்ளார் ஆகலின், வியங்கோட்கிளவி முன்னிலை தன்மைகளில் வாராது என்பது அவர் கருத்தாதல் நன்கு அறியப்படும். வியங்கோளை விலக்கியாங்கே அதனை யடுத்து,[1]

'பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னுங் கிளவியொடு கொள்ளா'

என்னுஞ் சூத்திரத்தால், செய்யும் என்னும் முற்றுச்சொல் வாராத இடம் இவை என்று, எய்தியதனை விலக்கியுள்ளார் ஆகலின் செய்யும் என்னும் முற்றுச்சொல் பல்லோர் படர்க்கையிலும் தன்மை முன்னிலைகளிலும் வாராததுபோன்றே வியங்கோட்கிளவியும் தன்மை முன்னிலைகளில் வாராது என்பது தெளிவுறும். 'இவை இரண்டு சூத்திரமும் ('அவற்றுள், முன்னிலை தன்மை ...கிளவி', 'பல்லோர் படர்க்கை ...கொள்ளா' என்பன) பொதுவகையான் எய்தியனவற்றை விலக்கி நின்றன' என்று சேனாவரையர் எழுதியிருப்பது அறியத்தக்கது.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார் வியங்கோட்சொல் இன்னது என்று கூறுவது யாது என்று நோக்குவோம். அவர் [illegible] அகர ஈற்றுப் புணர்ச்சிக்கண் வியங்கோட் கிளவியைச் சேர்த்துக் கூறியிருத்தலின், வியங்கோட்கிளவி அகர ஈற்றது என்பது அறியலாகும். பிற ஈறுகளுக்குப் புணர்ச்சிவிதி கூறியவிடத்தில் வியங்கோட்கிளவியைச் சேர்த்திலர் ஆகலின், அகர ஈற்றுப் பிற ஈறுகளையுடைய வியங்கோட்சொல் இன்று என்பது உணரப்படும். ஆகவே அவர் கருத்தின்படி, வாழ்க செய்க என்பனபோன்ற ககர ஈற்றுச் சொல்லே வியங்கோட்சொல் எனப்படும் என்பது தேற்றம். 'வியங்கோள்—படர்க்கைப் பொருண்மேல் ஏவற்பொருண்மையைக் கொண்டுவரும் முற்றுச்சொல்' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதியிருப்பது இதற்குப் பொருந்தும். இப் படர்க்கைக்கண் திணைவேறுபாடும் எண்வேறுபாடும் இன்றி, ஐம்பாற்கண்ணும் வழங்கும். கன்னடத்திலே, இவ்வீற்றுச் சொற்கள் வியங்கோட்பொருளில் படர்க்கை ஐம்பாற்கும் வருதல் ஈண்டைக்கு அறிதற்பாலது. தமிழில் ககர ஈற்றது கன்னடத்தில் கெ ஈற்றதாய்த் திரிந்துள்ள இத்தனையே வேறுபாடு.

இனி, வியங்கோட்கிளவி முன்னிலை தன்மைகளில் நிலைபெறாது என்று ஆசிரியர் தொல்காப்பியனார் விலக்கியதன் காரணத்தை நோக்குவோம்: வியங்கோட்பொருளில் முன்னிலை தன்மைகளில் வரும் வினைச்

1. வினையி. 28.

சொல்லுமுறையே முன்னிலைவினையிலும் தன்மைவினையிலும் ஆசிரியர் அடக்கினாராயின், அவ் வினைச்சொல், அவ்விடங்களில் ஒருமை பன்மை வினைகட்குக் கூறிய விகுதிகளை ஏற்றன பெற்று வரும். ஆகலின், ஏனை வேறுபாடு இன்றிப் படர்க்கைக்கண் வரும் கவ்வீற்று வியங்கோட்சொல் ஏனையிடங்களில் வாராது என்று விலக்கப்பட்டது.

ஆசிரியர் நச்சினார்க்கினியர்[1] ஐ ஆய் (முன்னிலைவினை) முன்னின்றான் தொழில் உணர்த்துவனவும் அவனைத் தொழிற்படுத்துவனவும் என இருவகைய. ஐ ஆய் முதலியன தொழிலுணர்த்துவன; நட வா முதலிய உயிரீறும் புள்ளியீறும் தொழிற்படுத்துவன' என்று எழுதியிருப்பதையும், தெய்வச்சிலையார்,[2] 'முன்னிலைவினை என்றது "முன்னிலை" எனப் பொதுப்படக் கூறியவதனால் அச்சொல் இருவகைப்படும், முன்னின்றான் தொழில் உணர்த்துவனவும் அவனைத் தொழிற்படுத்தற்கு ஏவல் குறித்து வருவனவும் என' என்று எழுதியிருப்பதையும் முன்னிலை ஏவல்வினையையும் முன்னிலைவினையுள் ஆசிரியர் அடக்கியுள்ளார் என்பது அறியலாகும். இவ்வாறே வாழ்த்துதல் முதலிய பொருளில் முன்னிலைக்கண் வரும் வியங்கோள் வினையையும் முன்னிலைவினையுள் அடக்கினார் என்று கொள்ளப்படும். அவ்வாறே தன்மைக்கண்ணும் கொள்க. கன்னட மொழியிலே, [illegible] வியங்கோள் முன்னிலை தன்மைகளில் வாராமை ஈண்டு அறியற்பாலது. ஆயின், முன்னிலை தன்மைக்கண் வியங்கோட்பொருளில் வரும் சொற்கள் எவ்வெவ்விகுதி பெற்று வரும் எனின், அது முன்னர்க் கூறப்படும்.

ஈண்டு, வியங்கோளைக் குறித்து உரையாசிரியர்கள் எழுதியிருப்பவற்றை நோக்குவோம்:

உரையாசிரியர் :—உரையாசிரியர், 'முன்னிலை தன்மை ...வியங்கோட்கிளவி' என்னுஞ் சூத்திரத்திற்கு, 'முன்னிலை தன்மை இரண்டிடத்துஞ் செல்வனவாகிய வியங்கோள்வினைச்சொல் சிறுவரவின' என்று பொருள் எழுதியுள்ளார். 'மன்னாது' என்பதற்கு நிலையாது என்பதுவே பொருளாதல், [3] 'மன்னாப் பொருளும் அன்ன இயற்றே' என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படுமாகலின், அதற்கு, 'சிறுவரவின' என்று கூறும் பொருள் அமைவதன்று.

1. தொகைமரபு 9-உரை.
2. வினையியல் 26-உரை.
3. கிளவியாக். 34.

சேனாவரையர் :— 'முன்னிலை....., வியங்கோட்கிளவி' என்னுஞ் சூத்திரத்திற்குச் சேனாவரையர், 'மேல், எஞ்சிய கிளவி எனப்பட்ட ஏழனுள், வியங்கோட்கிளவி முன்னிலையும் தன்மையும் ஆகிய இரண்டிடத்தொடு நிலைபெறாதாம்' என்று பொருள் கூறி, பின், 'ஆயீரிடத் தொடு கொள்ளாது என்னாது, "மன்னாதாகும்" என்றதனால் அவ்விடத் தொடு சிறுபான்மை வருதல் கொள்க. மன்னுதல்—பெரும்பான் மையும் நிகழ்தல்' என்று எழுதியிருக்கின்றார். அவர் எழுதியிருக் கும் விசேடவுரை அமைவதன்று; மன்னாது என்பதற்கு நிலைபெறாது என்றெழுதியிருக்கும் உரை உட்கொளத்தக்கது.

நச்சினார்க்கினியர் :— ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'முன்னிலை ......வியங்கோட்கிளவி' என்னுஞ் சூத்திரத்திற்கு, 'ஏவற் பொருண் மையை முற்றமுடித்தலை உணர்த்துஞ் சொல் முன்னிலையும் தன்மையு மாகிய அவ் விரண்டிடத்துப் பொருளொடும் அஃறிணைக்கண் பெரும் பான்மையும் நிலைபெறாது; உயர்திணைக்கண் பெரும்பான்மையும் நிலை பெறும்' என்று உரை எழுதியிருக்கின்றார். அன்றியும் அவர், [1]'நோயும் இன்பமும்' என்னும் பொருளியற் சூத்திரத்தினும்,[2] 'ஞாயிறு திங்கள்' என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தினும் ஏவற்பொருண் மையை அஃறிணை முற்ற முடியாது என்பதை ஆசிரியர் கூறுகின்றார் என்றும், அவற்றிற் கேற்ப ஈண்டும், முன்னிலைக்கண் வரும் அஃறிணை ஏவற்பொருண்மையை முற்ற முடியாது என்பதை 'மன்னாதாகும்' என்பதனால் உணர்த்தினார் என்றும், நட வா முதலிய இருபத்து மூன்றீற்று முன்னிலையேவலொருமையும் அஃறிணைக்கண் வருங்கால் ஏவல்வினையை உணர்ந்து அவை முற்றமுடியா என்றும், அவற்றை ஏவுதல் மரபன்று என்றும் கூறியுள்ளார்.

'மன்னாது' என்னுஞ் சொல்லிற்கு (உயர்திணைக்கண்) நிலைபெறும் என்று பொருள் கூறுதல் யாங்கனம் அமையும்? அன்றியும், அஃறிணைப்பொருள் ஏவலின் பொருளை அறிந்து அதனை முற்ற முடிக்குந் திறனுடையதன்று என்னுங் காரணத்தால் முன்னிலை யிடத்தில் அஃறிணைப்பொருட்கண் வியங்கோள் வாராது எனின், படர்க்கையிடத்தில் அஃறிணைக்கண் வியங்கோள் வருதல் எவ்வாறு அமையும்? ஆண்டும் அஃறிணைப்பொருள் ஏவலை அறிந்து முற்ற முடியாவன்றே?

இவற்றால், நச்சினார்க்கினியர் கூறியுள்ள பொருளும் காரணமும் அமைவுடையவல்ல என்பது அறியலாகும்.

---

1. பொருளியல் 2. 2. செய்யுளியல் 201.

**கல்லாடர்:**—கல்லாடர், 'முன்னிலை வியங்கோள்......ஓரன்ன உரிமைய' என்னுஞ் சூத்திரத்தின் உரையில், வியங்கோள் பெரும்பான்மையும் படர்க்கை இடத்திற்கே வரும் என்றார். அவர், 'முன்னிலை ..........வியங்கோட் கிளவி' என்னுஞ் சூத்திரத்திற்கு, 'முன்னிலை தன்மை என்று சொல்லப்பட்ட அவ்விரண்டிடத்தொடு நிலைபெறாதாகும், அவற்றின் ஏவற்பொருண்மையை உணர்த்துஞ் சொல்' என்று உரை கூறி, '"தன்மை முன்னிலை" என்னாது, "முன்னிலை தன்மை" என்றதனால், சிறுபான்மை முன்னிலை தன்மைக்கண்ணும் வரும்' என்று விசேடவுரை எழுதினார். இவர் கூறிய பொருள் அமைவுடையது; விசேடவுரை ஆசிரியர்கருத்திற்கு ஒத்ததன்று.

[1]பழையஉரை:—'முன்னிலை......வியங்கோட்கிளவி' என்னுஞ் சூத்திரத்திற்கு, முன்னிலையும் தன்மையும் ஆகிய இரண்டிடத்தும் பொருளொடு ஏவற்பொருண்மையை முற்ற முடித்தலை உணர்த்துஞ் சொல் நிலைபெறாதாகும்' என்று பொருள் எழுதி, 'முன்னிலை தன்மை எனச் சூத்திரஞ் செய்தலாற் சிறுபான்மை உயர்திணைத் தன்மையினும் முன்னிலையினும் வரும்' என்றும், 'அஃறிணைக்கண் தன்மைச்சொல் இல்லாமையானும் அஃறிணைமுன்னிலை ஏவற் பொருண்மையை முற்ற முடியாமையானும் கூறிற்றிலர்' என்றும் கூறுகின்றது.

இவ்வுரை, சூத்திரத்திற்குக் கூறியுள்ள பொருள் அமைவுடையதே; விசேடவுரையும் அதிற் கூறுங் காரணமும் அமைவுடையன வல்ல.

**தெய்வச்சிலையார்:**—தெய்வச்சிலையார், 'முன்னிலை......வியங்கோட் கிளவி' என்னுஞ் சூத்திரத்திற்கு 'வியங்கோட்சொல் முன்னிலையும் தன்மையுமாகியவிடத்து [2]நிலைபெறு' என்று பொருள் கூறியுள்ளார். அன்றியும் அவர், நீ வாழ்க நீ உண்க என்று முன்னிலைக்கண் வருதல் மரூஉவழக்கு என்றும் எழுதியிருக்கின்றார்.

அவர் கூறியுள்ள உரை அமைவுடையதே.

---

1. இவ்வுரையின் ஆசிரியர்பெயர் தெரியவில்லை. இஃது உரியியல் முடியக் கிடைத்துளது; சர்வகலாசாலைப் பதிப்பாய் வெளிவரும்.
2. நிலைபெறாது என்றிருத்தல் வேண்டும்.

இவ்வுரைகளுள் இளம்பூரணமும் சேனாவரையமும் கல்லாடமும ஒருதன்மையவாதலும், நச்சினார்க்கினியமும் பழையவுரையும் ஒரு தன்மையவாதலும், தெய்வச்சிலையாருரை தனித்தகைமையதாதலும், மேல் எழுதியிருப்பவற்றான் அறியப்படும். இவற்றுள் ஆசிரியர் கருத்திற்கு ஒத்தவுரை தெய்வச்சிலையாருரையே ஆகும்.

இனி, நன்னூல் முதலிய பிற்கால இலக்கணங்களை நோக்குவோம் :

**நன்னூலார் :**—நன்னூலார் முன்னிலை யொருமைவினையைக் கூறுமிடத்து,

'ஏவலின் வருஉம் எல்லா வீற்றவும்'

என்று கூறியிருத்தலின், நட வா முதலிய இருபத்து மூன்றீற்றுச் சொற்களும் ஒருமையேவல் வினைகளாய் வரும் என்பதும், முன்னிலைப் பன்மை வினையைக் கூறுமிடத்து,[2] 'மின் அவற்றேவல்' என்று கூறியிருத்தலின், மின் ஈற்று வினைச்சொல் பன்மையேவலாகும் என்பதும் அறியப்படும். அவர்,

[3] 'கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கு மென்ப'

என்று கூறியிருத்தலின், க முதலிய ஈற்று வியங்கோள் மூன்றிடத்தும் ஐந்து பாலிலும் வரும் என்பது நன்கறியலாகும்.

இவற்றால், ஏவல்வினை முன்னிலையில் மட்டுமே வருவது என்பதும், வியங்கோள்வினை மூன்றிடத்தும் வருவது என்பதும் நன்னூலார் கொள்கையாதல் பெறும்.

**நேமிநாதர் கொள்கை :**—நேமிநாத நூலாரும் வியங்கோள் மூன்றிடத்தும் ஐந்து பாலிலும் வரும் என்று கொண்டார்.

[4] '......வேறில்லை உண்டு வியங்கோளும்—தேறும்
இடமூன்றே டெய்தி இருதிணை ஐம் பாலும்
உடனொன்றிச் சேறலும் உண்டு'

என்றது காண்க. ஆயின் அவர், நட வா முதலிய வினைகளையும், மின் ஈற்று வினைச்சொல்லையும் முறையே முன்னிலை யொருமை வினையிலும் பன்மை வினையிலும் அடக்கியுள்ளாரேயன்றி, அவற்றை,

1. வினையியல் 16.
2. ,, 18.
3. வினையியல் 19.
4. வினைமரபு 17.

நன்னூலார்போன்று 'ஏவல்' என்னும் பெயரான் விதந்து கூறினாரல்லர்.

[1]'மின்னும்இர் ஈரும் விளம்பு மிருதிணையின்
முன்னிலைப் பன்மைக்காம் மொய்குழலாய்—சொன்ன
ஒருமைக்கண் முன்னிலையாம் இஐஆய் உண் சேர்
பொரு என் பனவும் புகல்'

என்றதை நோக்குக. அதன் உரைகாரரும் இவை ஏவல்வினை என்று தெரிந்திலர்.

இலக்கண விளக்கத்தார் கோள்கை :—இலக்கண விளக்கத்தில், [2]நட வா முதலிய இருபத்து மூன்றீற்றுச் சொற்களும், [3]அல் ஆல் எல் காண் என்னும் ஈறுகளையுடைய சொற்களும் முன்னிலைக்கண் ஒருமையேவலாய் வரும் என்றும், மின் உம் இவ்விற்றுச் சொற்கள் பன்மையேவலாய் வரும் என்றும் கூறியுள்ளார். அவர் நச்சினார்க்கினியத்தைப் பின்பற்றி ஒருமையேவலில் அல் முதலிய நான்கீறும் பன்மையில் உம்மீறும் கூட்டியுள்ளார். [4]'முன்னின்றான் தொழில் உணர்த்துவனவேயன்றி அவனைத் தொழிற்படுத்துவனவும் எதிர்முகமாத லொப்புமையான் முன்னிலையாயின' என்று எழுதியிருக்கும் உரை அறியத்தக்கது. இனி,

[5]'கயவொடு ரவ்வொற் றல் ஆல் உம் மார்
ஐகா னீற்ற வியங்கோள் முற்றவை
எய்து மிடம்பால் எங்கு மென்ப'

என்னுஞ் சூத்திரத்தால், வியங்கோள்வினை ககரம் யகரம் முதலிய எட்டு ஈற்றதாய், மூன்றிடத்தும் ஐந்து பாலிலும் வரும் என்பது கூறப்பட்டது.

பிரயோக விவேக நூலார் கோள்கை :—[6]பிரயோக விவேக நூலார் நட, வா முதலிய சொற்கள் ஏவல்வினையாய் வரும் என்று கூறியுள்ளார்.

---

1 வினைபரவு 5.
2. வினையியல் 12.
3. 'உண்ணும் தின்னும் எனப் பன்மைக்கண் வரும் உம ஈறும், உண்ணல் என வரும் அல்லீற்று மறையும், மருல் என வரும் ஆலீறும், அகையேல்......என வரும் ஏலீறும், உண்டுகாண்...... என வரும காணீறும் 'ஆகிய சொல்வகை ஐந்து' என்பது நச்சினார்க்கினியம். (வினை. 27-உரை.)
4,5. வினையியல் 13.
6. திஙகுப்படலம் 1 உரை.

ஆயின் அவை ஏவல்வினை யாங்கால் எடுத்துச்சரிக்க வேண்டும் என்று விதித்திருக்கின்றார். வியங்கோள் மூன்றிடத்தும் வரும் என்பதுவே அவர்கருத்து.

**இக்காலத்தார் கோள்கை:**—நன்னூல் முதலிய பிற்கால நூல்களில் ஏவல்வியங்கோள்களுக்குக் கூறப்பட்டிருக்கும் இலக்கணத்தை நோக்கி, அவை இரண்டற்கும் உள்ள வேறுபாட்டை [1] இக்காலத்தவர் இவ்வாறு கூறியுள்ளார். அவையாவன: 'ஏவல் கட்டளைப் பொருளில்மாத்திரமே வரும்; வியங்கோள் வாழ்த்துதல் முதலிய பல பொருள்களில் வரும்; ஏவல் முன்னிலையில்மாத்திரமே வரும்; வியங்கோள் ஐம்பால் மூவிடங்களிலும் வரும்; ஏவலில் ஒருமை பன்மை என்ற பகுப்பு உண்டு; வியங்கோளில் அப் பகுப்பு இல்லை' என்பனவாம்.

இவையெல்லாம் தொல்காப்பியனார்கொள்கைக்கு மாறுபட்டனவே யாதல் மேல் எழுதியிருப்பவற்றான் அறியப்படும். இவை அமைவுடையனவு மாகா என்பது முன்னர்க் கூறப்படும். ஈண்டு, வடமொழியிலும் தெலுங்கு முதலிய திராவிட மொழிகளிலும் இது பற்றிக் கூறப்பட்டிருப்பவற்றை நோக்குவோம்:

**வடமொழி:**—இவ்விப் பொருளில இவ்விவ் வினைவிகற்பம் (பத்துவகை லகாரங்களுள் ஏற்பது) வரும் என்பது பாணினீயத்தில் விரிவாகக் கூறப்பட்டுளது. ஆண்டு,

[2] 'விதி நிமந்த்ரணமந்த்ரணாதீஷ்ட ஸம்ப்ரஶ்ந ப்ரார்த்த நேஷு லிங்

[3] 'லோட் ச

என்பன கூறப்பட்டுள்ளன. விதி முதலிய பொருள்களில் 'லிங்'கும் 'லோட்'டும் வரும் என்பது இவற்றின் கருத்து. இவை எற்ற பெற்றி மூன்றிடத்தும் வரும்.

விதியாவது—பணியாளர் முதலிய தாழ்ந்தோரை ஏவுதல்.

நிமந்த்ரணமாவது—ஆவசியமாகச் செய்யக்கடவதனைச் செய்ய ஏவுதல். (இது செய்யாவிடின் குற்றம் நேரும்.)

---

1. சடகோபராமாநுஜாசாரியர் காண்டிகை யுரை.
2. பாணினீ 3 . 3 : 161.
3. ,, 3 . 3 : 162.
4. ஸித்தாந்த கௌமுதி.

ஆமந்த்ரணமாவது—விருப்பமானதைச் செய்ய அனுமதித்தல்.

அதீஷ்டமாவது—ஸத்காரஞ் செய்து ஏவுதல்.

ஸம்ப்ரச்னமாவது—எதைச் செய்வது என்று ஆராய்தல்.

ப்ரார்த்தனையாவது—இரத்தல்

இவற்றுக்கு [1]உதாரணம்—(லிங் வினைக்கு)

விதி—கடம் குர்யாத் (அவன் பாய் செய்யட்டும்.)

நிமந்த்ரணம் } —இஹ பவான் ஆஸீத (இங்குத் தாங்கள் இருக்க.)
ஆமந்த்ரணம் }

அதீஷ்டம்—அதீச்சாமோ பவந்தம் மாணவகம் பவான் அத்யாபயது. (நாங்கள் மாணவனுக்கு ஓதுவிக்கவேண்டும் என்று தங்களை வேண்டுகின்றோம்.)

ஸம்ப்ரச்னம்—கிம் நு கலு போ வ்யாகரணம் அத்யயை (ஐய, நான் இலக்கணம் படிக்கட்டுமா என்ன)

ப்ரார்த்தனை—பவதி மே ப்ரார்த்தனா வ்யாகரணம் அத்யயை. (இலக்கணம் கற்க என்பது என் வேண்டுகோளாகும்.)

இவற்றுள் விதி முதலிய நான்கும் ஏவுதலையே பொருளாக உடையதனால், விதி என ஒன்றாகக் கொள்ளுதல் அமையுமாயினும், அவற்றின் வேறுபாடு அறிதற்கு வேறு வேறு கூறியுள்ளார். 'ஏவலில் "லிங்" வரும் என்பதுவே சாலுமாயினும், அந் நான்கனையும் வேறு வேறாகக் கூறியிருப்பது விவரணத்தின் பொருட்டு' என்று, [2]சித்தாந்த கௌமுதியில் எழுதியிருப்பது காண்க. [3]வாழ்த்துதற் பொருளிலும் 'லிங்', 'லோட்' இரண்டும் வரும். [4]ஆசம்ஸை (தனக்கு இல்லாததும் விருப்பமுடையதுமானதை அடைய விழையும் வேட்கை), [5]இச்சை முதலிய பொருள்களில் வரும் வினையைக் குறித்து வேறு வேறு சூத்திரங்களிற் கூறியுள்ளார்.

விதிப்பொருள் (கட்டளை) படர்க்கையிடத்தும் வரும் என்பது ஈண்டு அறிதற்பாலது.

1. காசிகா.
2. ஸித்தாந்த கௌமுதி சூ. 2208 உரை.
3. பாணினீய 3 . 3 : 173.
4. ,, 3 . 3 : 132.
5. ,, 3 . 3 : 157.

**தேலுங்கு:**—தெலுங்குமொழியி லுள்ள [1]'பாலவ்யாகரணம்' என்னும நூலில் [1] வாழ்த்து, சாபம், வேண்டிக்கோடல் இப்பொருள்களில் படர்க்கைக்கண் எடுன், தன் என்னும் ஈறுகள் வரும் என்றும், [2]விதிப் பொருளில் [3]அதி (=அது) என்பது வரும் என்றார், [4]வாழ்த்து முதலிய பொருள்களில் முன்னிலையொருமைக்கு மு விகுதியும், பன்மைக்கு வே் விகுதியும் வரும் என்றும் கூறுகின்றது. எடுன், தன் ஈறுகள் படர்க்கையிலன்றி முன்னிலை தன்மைகளுக்கு வருதல் இல்லை.

[5]இனி, தன்மையும் முன்னிலையும் கூடிய வினை வேண்டுதற் பொருளில் வரும்போழ்து அமு (அம்) விகுதி வரும் என்பது கூறப்பட்டுளது. உதா :— மனமு வண்டுதமு. (நாம் சமைப்பாம)

வாழ்த்து முதலிய பொருள்களில் படர்க்கைக்கும் முன்னிலைக்கும் வேறு வேறு விகுதிகள் வருதலும், படர்க்கையில எண்வேறுபாடின்றி இருபாற்கும் ஒரு விகுதியே வருதலும், முன்னிலையில் எண்வேறுபா டிருத்தலும், உளப்பாட்டுப் பன்மையில வேண்டிக் கோடற் பொருளில அம் விகுதி வருதலும், வேண்டுதற் பொருள் படர்க்கையிடத்தும் வருதலும் ஈண்டு உளங்கொளற்பாலன.

**மலையாளம்:**—மலையாள இலக்கணங்களுட் சிறந்ததாகிய கேரள பாணினீயம் வினைச்சொற்களை நியோஜகம், விதாயகம், அனுஜ்ஞாயகம், நிர்த்தேசகம் என்னும நான்கு படியாகப் பிரித்துக் கூறுகின்றது. அவை குறிக்கும் பொருள் முறையே—நியோகம் (ஏவல்), விதி, அனுஜ்ஞை (உடன்பாடு), பகுதியின் பொருள் என்பன.

நியோஜகம் (ஏவல்வினை)—முன்னிலையொருமையில் பகுதியளவேயாய் இருக்கும் ; கு-சேர்ந்தும் வரும். பன்மையில் இன் (வின் = மின்) சேர்த்து வழங்கப்படும். தன்மையிலும படர்க்கையிலும் ஒருமை பன்மை இரண்டற்கும் 'அட்டெ' என்பது சேர்ந்து வரும்.

உதா :—

| | |
|---|---|
| போ, போகு | —முன்னிலையொருமை |
| போகின், போகுவின் | —முன்னிலைப்பன்மை |

---

1. பாலவ்யா. க்ரியாபரிச்சேதம். 26.
2. ,, ,, 27.
3. தமிழிலும் அது என்பது, செய்வது கூறுவது என்பனபோல வியங்கோட் பொருளில் சிறுபான்மை வருகின்றது.
4. பாலவ்யாகர. க்ரியாபரிச். 29.
5. ,, ,, 30.

ஞான் போகட்டெ (நான்)
ஞஙஙள் போகட்டெ (நாங்கள்) } தன்மை

அவன் போகட்டெ
அவள் ,,
அவர் ,, } படர்க்கை
அது ,,
அவ ,,

விதிவினையில் அணம் (வேண்டும்—வேணம்) என்பது சேர்ந்து வரும். (இதில் இடவேறுபாடு இல்லை.) உதா :—

பறயணம்—(சொல்லவேண்டும்)

அனுஜ்ஞை வினையில் ஆம் என்பது சேர்ந்துவரும். உதா :—
போகாம்—(போகலாம்)

தமிழில் வழங்கும் வியங்கோள் வினைக்கு ஆஸாஸகம் என்று* பெயரிடப்பட்டுளது. உதா :—

'குணநிதி குருநாதனும் மே
துணையருளீடுக காவ்யபாந்தனுர்த்தம்' (மே — எனக்கு)

ஆர்யே வேஷம் நரிசு கழிஞ்ஞால் இங்ஙோட்டு வரிக தன்னே இங்கு, பவதி (தான்) என்னும் படர்க்கைச்சொல் சேர்த்து முடிபு கொள்ளல் வேண்டும.

முன்னிலை யொருமையேவலில விகுதியில்லாமல் வழங்குதலும், விதிப்பொருளில் வேண்டும் என்பதன் மரூஉவாகிய அணம் என்பது வழங்குதலும் இரண்டு அறியவேண்டுவன. மலையாளத்தில் அட்டெ என்பதற்கீடாகத் தமிழில அட்டும் என்பது வழங்குகின்றது. அது தமிழில படர்க்கை ஐம்பாற்கே வரும். இது வேறுபாடு.

கனனடம்.—கன்னட மொழியில் உள்ள 'கர்ணாடக ஶப்தானுஶாஸனம்' என்னும் நூலில்,

[1]'ஆஶீர் விதி நிமந்த்ரணாமந்த்ர ணாத்யேஷண ஸம்ப்ரஶ்ந ப்ரேஷண விஜ்ஞாபனாஜ்ஞாபன ப்ரார்த்தனே கெ(எ)த்'

என்று கூறப்பட்டுளது. ஆசி முதலிய பொருள்களில் கெ விகுதி வரும் என்பது பொருள்.

ஆசியாவது—கூறப்படுவோனுக்கு விருப்பமுள்ளது உண்டாகுமாறு வேண்டுதல்.

---

1. கர்ணாடகஶப்தானுஶாஸனம் சூ. 465.

பரேஷணமாவது—தாழ்ந்தவனை ஒன்று செய்ய ஏவுதல

விஜ்ஞாபனமாவது—உயர்ந்தவனிடம் ஒன்று செய்ய வேண்டிக்கோடல

ஆஜ்ஞாபனம்—ஒருவன் செய்யவேண்டிய வேலையைச் செய்ய ஏவுதல் (கட்டளை)

(மற்றவற்றின் பொருள், மேல் வடமொழியில் எழுதப்பட்டுள்ளது காண்க)

கெ-விகுதி படாக்கையிடத்திலமட்டும் ஒருமை பன்மை இரண்டிற்கும் வருவது உதாரணம்

ஆசி—இருபத்துநால்வர் தேவர் விமலரதனர்ரயத்தைத் தயை செய்க

விதி—அறிவுடையவன் இறைவனைப் பூசிக்க

நிமந்தரணம்—அந்தியில் நியமம் செய்க (செய்யாவிடின் குற்றம் வரும்)

ஆமந்தரணம்—புலவர் பிரசங்கம் செய்க

அத்யேஷணம்—ஆசிரியன் மாணுக்கனை ஓதுவிக்க

ஸம்பரச்நம்—மகன் இலக்கணங் கற்கவா, வேதமோகவா

பரேஷணம்—அடியார் ஊழியஞ் செய்க

விஜ்ஞாபனம்—அரசன் இதைச் செய்க

ஆஜ்ஞாபனம்—குடிகள் இவ்வாறு ஒழுகுக

ப்ரார்த்தனை—எனக்கு இவன் ஐயம் இடுக

இவையெல்லாம் படாக்கையிடத்தனவாதல் அறிக

[1]ஆண்பால் பலர்பாலகளில் வாழ்த்து முதலிய பொருளில் 'அது' விகுதிவரும் உதா —

ஜினன் எமக்குச் சுகத்தைச் செய்வது (மாடுவது)

குருக்கள் எமக்கு மெய்ப்பொருள் சொல்வது (பெஸஸுவது)

நீயிர் எமக்கு விரும்பியதை ஈவது (ஈவுது)

[2]இப்பொருள்களில் முன்னிலைப்பன்மையில் [3]'இம்' விகுதி வரும் உதா:

குருக்கள், மகிழ்வுடன் எமக்குக் கதை சொல்லும் (பெஸஸிம)

1. காண்டகஸுபதாநுஸா சூ. 466.
2. ,, சூ. 467.
3. இம் என்பது (கன்னடத்தில்) முன்னிலைப் பன்மையாகிய நீம் என்பதன் கூறு தமிழில் நும் என்பது பெயராகலின் உம் என்பது இப்பொருளில் வழங்குகின்றது. செய்யும், கேளும் என்பனபோல் பவற்றில் உம் விகுதி வந்தது காண்க. இவ்விகுதியை நச்சினார்க்கினியர் மேற்கொண்டுள்ளார்.

[1] இப்பொருள்களில் முன்னிலையொருமையில அய் கெடுதலும் வருதலும் உண்டு. அ-வாராமையும் உண்டு. உதா:—

'ஜினஸுதனை செய்ய விமலரத்னத்ரயத்தை'.
'ஜினஸுதனை செய்'.

செய்யை (=செய்வாய்) என்று ஐ விகுதி பெற்று இப்பொருள்களில் வருதல் இல்லை.

[2] இப்பொருள்களில் தன்மைப் பன்மையில் எவு (எம்) என்பதற்கு 'வம்' அம் வரும். உதா:—

நாமெல்லாரும் இங்கு அசுவமேதம் செய்வம்.
நானும் நீயும் இந்த நோன்பு செய்வம்.

[3] இப்பொருள்களில் தன்மை யொருமையில் 'என்' என்பது 'வென்' என்று திரியும். உதா:—

நான் ஜினனைப் பூஜிக்குவென் (பூஜிஸு-வென்)

கர்ணாடக ஸப்தமணி தர்ப்பணகாரர், [4]"விதிப் பொருளில் படர்க்கை யொருமை பன்மைகட்குக் கெ, ஹெ வரும்; ககரம் இரட்டித்தலும் உண்டு. முன்னிலை தன்மைகளில் பன்மைக்கு முறையே இம், அம் என்பவை வரும்' என்றும்,

[5] விதிப்பொருளில் முன்னிலையொருமையில் ப்ரக்ருதியே வரும் என்றும்,

[6] முன்னிலை யெதிர்மறைவினை விதிப்பொருளாகுமிடத்து அல்-வரும் (மீறலிட-மீறன்மின்) என்றும் சுருங்கக் கூறியுள்ளார்.

கன்னடத்தில விதி முதலிய பொருள்களில படர்க்கையிடத்து மட்டுமே கெ விகுதி வரும் என்பதும், ஏனையிடங்களில் வேறு வேறு விகுதிகள் வரும் என்பதும், விதி முதலிய பொருள்கள் மூன்றிடத்திலும் வரும் என்பதும் ஈண்டு அறியவேண்டுவன.

இதுகாறும் கூறியவற்றால், வடமொழியிலும் தெலுங்கு முதலிய திராவிட மொழிகளிலும் ஏவல்வினை படர்க்கையிடத்தும் வருதலும்,

---

1. கர்ணாடகஸப்தானுஸாஸனம் சூ. 468.
2. ,, சூ. 470.
3. ,, சூ. 471.
4. ஸப்தமணிதர்ப்பணம் 240.
5. ,, 241.
6. ,, 245.

வாழ்த்துதல் வேண்டுதல் முதலிய பொருள்களில் வரும் வினை ஏற்ற பெற்றி மூன்றிடத்தும் வருதலும் அறியப்படும். அன்றியும், கன்னடம் தெலுங்கு இம் மொழிகளில் வாழ்த்துதல் முதலிய பொருளில் வரும் வினைக்கு முன்னிலை தன்மைகளில் வேறு வேறு விகுதிகள் அமைந்திருத்தலும் புலனாகும்.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார் வியங்கோட் கிளவி முன்னிலை தன்மைகளில் வாராது என்று விலக்கியது பற்றி ஆராய்வோம்:

**வியங்கோட் பொருளில் முன்னிலை தன்மைகளில் வரும் விகுதிகள்**

ஆசிரியர் தொல்காப்பியனார் வியங்கோள் என்று கொண்டது கவ்வீற்று வியங்கோளையே என்பதூஉம், அஃது எண்வேறுபாடின்றி ஒருமை பன்மை இரண்டற்கும் வருதலின், அச்சொல் முன்னிலை தன்மைகளில் வாராது என்று விலக்கப்பட்டது என்பதும் மேற்கூறப்பட்டன. அதனால், வாழ்த்துதல் முதலிய பொருள்களில் முன்னிலை தன்மைகளில் கவ்வீறல்லாத பிறவீற்று வினைச்சொல் வரும் என்பது உணரலாகும்.

தெய்வச்சிலையார் 'வாழ் உண் தவிர் என்னும் ஏவல் குறித்த சொற்கள் தன்மைப்பெயர்க்கண்ணும் படர்க்கைப்பெயர்க்கண்ணும் ஏலாது, முன்னிலை யொருமைப்பெயர்க்கண் நீ வாழ், நீ உண், நீ தவிர் என ஏற்றலின், ஆண்டுப் பாலுணர்த்துஞ் சொல்லோடு ஒரு நிகரன வாகி முன்னிலைவினையுள் அடங்கும். அப்பொருட்கண் தன்மை கூறும்வழி, யான் வாழ்வல், உண்பல, தவிர்வல எனக் கூறவேண்டலின் அவை தன்மைவினையுள் அடங்கின. இனிப் படர்க்கைக்கண் வருங்கால் அவன் வாழ்க, உண்க, தவிர்க எனக் ககரம் கடையாத்துக் கூறவேண்டுதலின் அவ்வாறு வருஞ் சொல் பாலுணர்த்தாமையின் வியங்கோள் என வேறு குறி பெற்றது. அவன் வாழ்க, அவள் வாழ்க, அவர் வாழ்க, அது வாழ்க, அவை வாழ்க என ஐந்து பாற்கும் உரித்தாகி வந்தவாறு கண்டுகொள்க. நீ வாழ்க, உண்க எனவும் வருமால் எனின் அவை அக் ககரம் பெறுக்காலும் பொருள் இனிது விளங்குதலின், அவ்வாறு வருவன மரூஉவழக்கு என்று கொள்க' என்று எழுதியிருக்கின்றார்.

இவற்றால், வியங்கோட் பொருளைக் குறிக்கப் படர்க்கையிடத்திற்குமட்டுமே தனிவிகுதி வேண்டும் என்பதூஉம், தன்மை முன்னிலைகட்கு அவ்விடங்கட் கோதிய விகுதிகளே சாலும் என்பதூஉம் அறியலாகும்.

---

1. கவ்வீற்றுச்சொல் தெலுங்கு மலையாள மொழிகளிற்போன்று தொழிற்பெயராகும் என்றும், அதனானே அது படர்க்கைக்குமட்டும் வரும் எனவும் ஏனையிடங்கட்கு வாராது எனவும் விலக்கப்பட்டது என்றும் கருதுவார் உளர்.

முன்னிலை யொருமைக்கண் ஏவல் முதலிய பொருளில் பகுதியே வழங்குதல் சாலும் என்பது நன்னூலார் நேமிநாதத்தார் நச்சினார்க்கினியர் பிரயோக விவேகமுடையார் இவர்தம் கூற்றுக்களானும் அறியப்படும். இனி, கர்ணாடக சப்தமணிதர்ப்பணம், கர்ணாடக சப்தானுசாஸனம், கேரளபாணினீயம் இவற்றிற் கூறியிருப்பதனால் இக்கொள்கை வலியுறுவதாகும். ஈண்டு, ஆய் விகுதி புணர்ந்து கெட்டது என்றாலோ அமைதி எனின், வடநூற் கொள்கைபற்றிக் கூறுவார் அங்ஙனம் கூறுபவாயினும் பகுதியே ஓசை வேறுபாட்டான் ஏவற்பொருள் தருதல் கூடும் என்பது தென்மொழியாளர் கருத்து. அன்றியும், உண்பாய் போவாய் வருவாய் என விகுதியோடு சேர்ந்த சொற்கள், உண்டாய் போனாய் வந்தாய் என்னும் வினைகளின் எதிர்கால வினைப்பொருளை உணர்த்துதலேயன்றி, உண், போ, வா என விகுதி சேராத சொற்கள்போன்று ஏவற் பொருளைத் தருதல் வழக்கில் இலது. பண்டைச் செய்யுட்களிலும் இப்பொருளில் ஆய் விகுதி சேர்ந்த சொற்கள் வழங்கிற்றில. பிற்காலச் செய்யுட்களிற் காண்பவை பண்டை நெறியிற் பிறழ்ந்து வந்தனவேயாகும். கன்னட மொழியில், ஐ விகுதி சேர்ந்த முன்னிலை யொருமைவினை ஏவல் முதலிய பொருளைத் தாராமை ஈண்டுக் கருதுதற்பாலது. இப்பொருளில் முன்னிலை யொருமைக்கண் விகுதி சேர்வதாயின், இகர விகுதி சேரும். உண்டி உரைத்தி தின்றி என் இகரஞ் சேர்ந்த சொற்கள் எடுத்தலோசையால் ஏவற் பொருள் தரும் என்றார் [1] நச்சினார்க்கினியரும். இகரவிகுதி வியங்கோட்பொருளும் தருதல் அடியார்க்கு நல்லாருரையினால் அறியலாகும். நச்சினார்க்கினியரும் அக் கருத்தினரே. இனி, செய்வீர் என்பதுவும் செய்தீர் செய்கின்றீர் என்பவற்றோடொப்ப வரும் எதிர்கால வினைப்பொருளைத் தருதலன்றிச் 'செய்யும்' என்பதுபோன்று ஏவற் பொருளைக் கருதல் வழக்கில் இல்லையன்றே? செய்யுட்களிலும் ஏவற்பொருளில் மின் விகுதி வருமென்று நன்னூலார் கூறினரேயன்றி இர் ஈர் விகுதி வரும் என்று கூறினாரல்லரே.

முன்னிலைப் பன்மைக்கண் ஏவல் முதலிய பொருள்களில் மின் விகுதி சேர்ந்து வரும். இவற்றால், முன்னிலை யொருமைவினைக்கோதிய விகுதிகளுள் ஐ ஆய் என்பனவும், பன்மை வினைக்கோதிய விகுதிகளுள் இர் ஈர் என்பனவும் சாதாரண வினைக்கண் வருவனவாகவும், முன்னிலை யொருமையில் இகரமும் பன்மையில் 'மின்'னும் வியங்கோள் வினையில் வருவனவாகவும் அமைந்துள்ளன என்பது அறியலாகும்.

---

1. வினையியல் 24-உரை.

தன்மை யொருமைக்கண் வியங்கோட் பொருளில் அல் விகுதி வரும் என்பது தெய்வச் சிலையாருரையினால் அறியலாகும். ஆகவே, தன்மையொருமைக் கோதிய விகுதிகளுள் என் ஏன் கு டு து று என்பவை சாதாரண வினைக்கண் வருவன என்றும், அல் விகுதி வியங்கோள்வினைக்கண் வருவது என்றும் அறிதல் கூடும்.

இனி, தன்மைப் பன்மைக்கண் வியங்கோட் பொருளில் எவ் விகுதி வரும் என்பதை ஆராய்வோம்: என் ஏன் கு டு து று என்னும் விகுதிகளுக்கேற்ற பன்மை விகுதிகளாகிய எம் ஏம் கும் டும் தும் றும் என்னும் விகுதிகள் பன்மை வினையில் சாதாரண வினைக்கண் வரும் என்பது தன்மை யொருமையிற் காணும் நியதியினால் அறிதல் கூடும். அவை யொழிய எஞ்சி நிற்பன அம் ஆம் விகுதி இரண்டே. இவையே வியங்கோட் பொருளில் தன்மைப் பன்மைக்கண் வருவன வாகும். இவ் விகுதிகள் முன்னிலையைத் தன்னொடு படுக்கும் பெய ராகிய நாம் என்பதன் கூறுதலை எளிதின் அறியப்படும். தெலுங் கிலும் கன்னடத்திலும் இப் பொருளில் அம் விகுதி வருதல் இவ் வூகத்திற்குப் பெரிதுந் துணை செய்கின்றது.

தன்மைவினைக் கோதப்பட்டுள்ள விகுதிகளுள் கு டு[1] து று[1] என் பவை மூன்றிடத்தும் ஒருமையைக் குறித்து வருவனவாயும், கும் டும் தும் றும் என்பவை மூன்றிடத்தும் பன்மையைக் குறித்து வருவன வாயும் மிகப் பழைய காலத்தில் அமைந்திருந்தன என்பது உய்த் துணர்தற்பாலது. கு டு து று விகுதிகள் தன்மை யொருமைக்கும் து று டு இவ் விகுதிகள் படர்க்கை ஒன்றன்பாலுக்கும் வரும் என்று தமிழிலக்கணங்கள் கூறுதலும், உம் விகுதி மூன்றிடத்தும் மூன்று காலத்தும் மூன்று லிங்கத்துக்கும் வேறுபாடின்றி வரும் என்று கன் னட இலக்கணங்கள் கூறுதலும் உளங்கொண்டு ஆராயத்தக்கன.

இதுகாறும் கூறியவற்றால் வியங்கோட் பொருளில் கன்னடத் திற்போலவே தமிழிலும் படர்க்கை ஐம்பாற்கும் கவ் விகுதி வருதலும், அப்பொருளில் அம்மொழியில் முன்னிலை தன்மைகளில் வேறு வேறு விகுதிகள் அமைந்திருப்பனபோன்று தமிழிலும் முன்னிலை தன்மைக ளில் வேறுவேறு விகுதிகள் அமைந்திருத்தலும் அறியப்படும். வாழ்த்து முதலிய பொருள்களில் தன்மை முன்னிலைகளில் ஒருமை பன்மைகட்கு இவ்விவ்விகுதி வரும் என்று கன்னடத்தில் விரித்துக் கூறியிருப்பது போன்று தொல்காப்பியனார் விதந்தோதிற்றிலர். இத்துணையே குறை.

1. டு, று இவை துவ்வின் திரிபு.

ஆயினும், பண்டைப் புலவருட் பலர் ககரவீற்று வியங்கோளைப் படர்க்கைக்கண்ணே வழங்கியுள்ளனர் முன்னிலை தன்மைகளில் வழங்கினாரல்லர்.

'அருள வல்லை ஆகுமதி அருளிலர்
கொடாமை வல்லர் ஆகுக
கெடாத துப்பின் நின் பகையெதிர்ந் தோரே'

என்றும்,

[2] 'இறங்குகதிர்க் கழனி நின் னிளையருங் கவர்க
நனந்தலைப் பேரூ ரெரியு நக்க
மின்னுநிமிர்ந் தன்ன நின் னொளிறிலங்கு நெடுவேல்
ஒன்னார்ச் செகுப்பினுஞ் செகுக்க என்னதூஉம்
கடிமரந் தடிதலோம்பு'

என்றும் வந்துள்ள பகுதியில படர்க்கைக்கண் கவ் விகுதி சேர்ந்திருத்தலும் முன்னிலைக்கண் சேராதிருத்தலும் காண்க. ஆயின்,

'பேரமருண்கண் இவளினும் பிரிக'
'கடாவுக பாக நின் காலவ னெடுந்தேர்'

என்று பண்டைச் செய்யுட்களிலேயே முன்னிலை தன்மைகளில கவ் விகுதி வந்துளதால் எனின், இவை தொல்காப்பியனார் கருத்திற்கு மாறாய் வந்தனவேயாகும். இவ்வாறே மாறாய் வந்துள்ளன பலப்பல. அற்றன்று, 'நீ கடாவுக என வாராது, பாக கடாவுக என வருதலின், அது படர்க்கைப் பெயர் விளியேற்றவழி வந்த தென்க' என்று தெய்வச்சிலையார் கூறியாங்கு, கடாவுக என்பது படர்க்கைக்கண் வந்தது என்று கொள்ளாமோ எனின், அஃது அமையாது. படர்க்கைபெயர் விளியேற்ற துணையானே எதிர்முகமாயிற்று. ஆகலின், ஆண்டு முன்னிலைப் பெயராகிய நீ என்பது வந்து 'கடாவுக' என்பதனோடு முடியும். ஈண்டு, தான் என்னும் படர்க்கைப் பெயரை வருவித்து, 'தான் கடாவுக' என்று முடித்தலாகாதோ எனின், அவ்வாறு படர்க்கைப் பெயரை முன்னிலைக்கண் கூறுவது உயர்வு கருதிய வழியே ஆகும். ஈண்டுப் பாகனுக்குத் தலைவன் கட்டளையிடுவதாகலின், உயர்வு குறிப்பதாகிய படர்க்கைப் பெயரை வருவித்து முடித்தல் வேண்டாவன்றே? ஆயின், சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'கடாவுக பாக' என்பது வேண்டிக்கோடற் பொருட்கண் வந்தது என்றாரால் எனின், தலைவன் விரைந்து செல்ல விரும்பின

---

1. புறம் 27. 2. புறம் 57.

ஞகலின், பாகனை வேண்டிக்கொண்டானவன் என்று கருதி, அவ்வாறு அவர்கள் கூறினராவர். தேர்ப்பாகன் பணியாளனாகலானும் 'கடாவுக' என்பவன் தலைவனாகலானும் ஈண்டு ஏவற்பொருளது என்றலே சிறக்கும். சேனாவரையர் இவ்வாறு வருபவற்றை வேண்டிக்கோடற் பொருட்கண் வந்த வியங்கோள் என்று கொண்டதனானே 'முன்னிலைக்கண் ஏவல் வருவதுணர்டேற் கண்டு கொள்க' என்று எழுதினர். ஈண்டு 'ஏவல்' என்றது எவற்பொருளில வரும் வியங்கோளை. இவ்வாறே 'தன்மைக்கண் ஏவல இலலை' என்ற விடத்தும் கொள்க.

வியங்கோளின் சொற்பொருள் :—இனி, வியங்கோள் என்னுஞ் சொல்லின் பொருளை நோக்குவோர் : வியங்கோள் என்பது வியத்தைக் கொள்வது என்னும் பொருளதாகும். ஆசிரியர் நச்சினார்க்கினியர், [1]'வியவர்—ஏவல செய்வார் ; வியங்கோள் போல' என்று எழுதியிருக்கின்றார். [2]பதிற்றுப்பத்தின் உரைகாரரும் 'வியம்—ஏவல்' என்று எழுதியுள்ளார். இவற்றால், வியங்கோள் என்பது ஏவலைக் கொண்டது என அறியலாகும். விதித்தல, வேண்டுதல, வாழ்த்தல், சபிதல் முதலிய எலலாவற்றினும் ஏவற் கருத்து அமைந்திருத்தலின், வியங்கோள் என்று பொதுப் பெயர் இடபபட்டுளது. நச்சினார்க்கினியர், 'அவைதாம் கூறுகின்றவர் கருத்தான் ஏவல் கண்ணியே வரும். உயர்ந்தான் இழிந்தானை இன்னது செய்க என விதித்தல் ஏவல் கண்ணியது. இழிந்தான் உயர்ந்தானை இன்னது செய்யவேண்டும் என வேண்டிக்கோடலும் ஏவல கண்ணிற்று. இனி, உயர்திணைப் பொருளாகிய முன்னிலைக்கண் வாழ்க வாழிய என வாழ்த்துப் பொருண்மைக்கண் வந்ததும் ஏவல கண்ணிற்று. "கடாவுக பாக நின் கால்வ னெடுந்தேர்' என வேண்டிக்கோடற் பொருண்மைக்கண் வந்ததும் ஏவல் கண்ணிற்று' என்று எழுதியிருப்பது ஈண்டைக்கு அறியத்தக்கது. 'வியங்கோள் ஏவற்பொருட்டாய் வருவது. வாழ்த்துதல் முதலாகிய பிற பொருளும் உடைத்தாகலின் இக் குறி மிகுதி நோக்கிச் சென்ற குறி என உணர்க' என்று சேனாவரையர் எழுதியிருப்பது உளங்கொளற்பாலது. வியங்கோட்கிளவி என்பதற்கு ஏவற்பொருண்மையை முற்ற முடிக்குஞ் சொல என்று உரைகாரர் பலரும் எழுதியிருப்பதும் அறியத்தகும்.

---

1. சீவக 601-உரை.
2. பதிற் 57-உரை.

**வியங்கோள் குறிக்கும் பொருள்கள்:** இக் கூறியவற்றால் வியங்கோள் குறிக்கும் பொருளும் ஓராற்றான் அறியப்படும். அவையாவன—ஏவல், விதித்தல், வாழ்த்துதல், வேண்டிக்கோடல் என்பன. இவற்றொடு சபித்தற் பொருளையுங் கூறினார் பிரயோக விவேக நூலார். செய்தற்பொருள், தவிர்தற்பொருள் இவ்விரண்டுந் தெய்வச்சிலையாருரையினால் அறியலாகும். ஸப்தானுஸாஸனத்தில் கூறப்பட்டுள்ள பத்துப் பொருளிலும் வியங்கோள் வரும் என்று கோடல் அமையும். வடமொழி முதலியவற்றிற்போலத் தொல்காப்பியனார் வியங்கோட் பொருள்களை விவரித்துக் கூறாததனால், முக்கியமான பொருள்களை மட்டும் உரையாசிரியர்கள் குறித்தனர்.

இனி, வியங்கோள் ஏவல் கண்ணியது எனவும் ஏவல் கண்ணாதது எனவும் இருவகைப்படும் என்றனர் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும். ஆயினும் அவர்க்குட் கருத்து வேறுபாடு உண்டு. அது முன்னர்க் கூறப்படும்.

**வியங்கோட் சொல்லின் விகுதிகள்:** ஆசிரியர் தொல்காப்பியனார் ககரவீற்று வினைச்சொல்லையே வியங்கோட்சொல் என்று கொண்டாராகலின், அஃது அகரவீற்றதாகும். அதனாலேயே அவர் அகரவீற்றுப் புணர்ச்சிக்கண் வியங்கோட் சொல்லுக்கும் விதி கூறினார். ஆயின், வியங்கோட் பொருளில் வருஞ் சொற்களை நோக்கிச் சேனாவரையர் அல்லீறும் ஆலீறுங் குறித்தார். அவர் ஆலீறெனக் கொண்டதுவும் அல்லீற்றினுட்பட்டு அடங்கும். நச்சினார்க்கினியர் அல் ஆல் என்னும் இரண்டொடு அ ஆர் உம் [1]ஐ இந்நான்கீறுங் கொண்டார். தெய்வச்சிலையார் அல்லீறு கொண்டதேயன்றி வாழ்க என்னுஞ் சொல் வாழி, வாழிய, வாழியர் எனவும் வரும் என்றாராகலின் இ, ய, அர் இவற்றையுங் கொண்டனராவர். அன்றியும் அவர், வியங்கோள் ஈறு திரியும் என்று கூறி,

‘திசை திசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசை தீர்ந்த என்னலம் வாடுவ தருளுவார்

ஏதினாட் டுறைபவர்

என்னும் அடிகளைக் காட்டி, ‘ஏதினாட்டுறைவார் அருளுவாராக என வேண்டிக்கோடற் பொருண்மைக்கண் ஈறு திரிந்தது’ என்று எழுதினார். இதனால், பொருளொக்கத்தால் சாதாரண வினைச்சொல்லும்

---

1. இதனை ‘மை’ விகுதி எனக் கொண்டுள்ளார் பிற்காலத்தவர்.

வியங்கோட் சொல்லாகக் கொள்ளப்படும் என்பது அறியலாகும். ஆசிரியர் நச்சினார்க்கினியர், '"நிலவன் மாரே புலவர்", "பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே", "நோய்மலி வருத்தங் காணன்மா ரெமரே" என்பன, நிலவுக பாடுக காண்க என்னும் வியங்கோட்கு எதிர்மறை என்று உணர்க. இனி, நிலவுவார் பாடுவார் காண்பார் என்பன சில வியங்கோண்முற்று என்று கூறி, அதற்கு எதிர்மறையாய் நிலவாதொழிவார் பாடாதொழிவார் காணாதொழிவார் என ஏவற் பொருண்மையை உணர்த்தி நின்றன என்றலும் ஒன்று' என்று எழுதி யிருப்பதனாலும் இக் கருத்து வலியுறும்.

மேலே கூறியிருப்பவற்றான், தன்மைக்கண் வரும் அல்லீறும் அம்மீறும் முன்னிலைக்கண் வரும் இகரவீறும் மின்னீறும் வியங்கோள் விகுதி எனக் கொள்ளப்படும். இவையேயன்றி, நட வா முதலிய இருபத்து மூன்றீறுகளும் பொருணோக்கத்தால் வியங்கோட் சொற்களாகுமாதலின் அவ்வீறுகளுஞ் சேர்த்துக் கொள்ளப்படும். இவற்றால் வியங்கோளீறுகள் பலவாதல் அறியலாகும்.

பழைய உரைகாரர்கோள்கையின்படி ஏவல் வியங்கோள்களின் வேறுபாடு:—இனி, நட வா முதலியன வியங்கோளாவது என்னை எனின், அதுபற்றி ஆராய்வோம்: ஏவப்பட்டான் முற்ற முடித்தற்குரிய வினை ஏவல்; மற்றையன வியங்கோள் என்பதே பழைய உரையாளர் பலர் கருத்து. இது, [1]'நை நொ நோ என வியங்கோளாகியும் வரும்' என்றும், [2]'உவ வே என வியங்கோளாயும் வரும்' என்றும், [3]'போ என ஏவலாயும் வரும்' என்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதியிருப்பவற்றான் அறியலாகும். ஒருவனை நோக்கி, 'நீ போ' என்று கூறின், உடனே அவன் அவ் வினையைச் செய்தல் கூடும். அவனை நோக்கி, 'நீ உவ' (உவப்புடனிரு) என்றுதல், 'நீநை' (வருந்து) என்றுதல் கூறின், அவன் உடனே யாது செயற்பாலன்? அன்றியும் 'உவ' என்று கூறினவன், கூறப்பட்டவன் உவப்படையத்தக்க நல்வினை சேர்தல் வேண்டும் என்னுங் கருத்தினனாய்க் கூறினானேயன்றி, போ என்பதுபோலக் கட்டளையிட்டானுமல்லன். 'நை' என்றதும் இவ்வாறே யாகும். 'ஆ வாழ்க அந்தணர் வாழ்க' என்னும் வியங்கோளும் இதுபோன்றதே. 'மன்னிய பெருமநீ நிலமிசை யானே' என்றவழி, 'மன்னிய' என்பது ஏவல் கண்ணாத வியங்கோள் என்னும் உரையாசிரியர்கருத்தின்படி இத்தகைய வியங்கோள் ஏவல்கண்ணாத வியங்கோள்

1. மொழிமரபு 41-உரை.
2. மொழிமரபு 41-உரை.
3. மொழிமரபு 43-உரை

ஆகும். இதுவும் ஏவல் கண்ணியதே என்று நச்சினார்க்கினியர் கூறி னாரல் எனின், 'ஏவல்கண்ணுதது" என்பதற்கு, வாழ்த்தப்பட்டானை ஏவியதன்று என்று பொருள் கொள்ளாமல் அவன் வாழ்தலைக் கண்ணிற்றிலது என்று பொருள்கொண்டாரை மறுத்தாராவர். நிற்க.

நொ என்பதனை வியங்கோளாகக் கூறிய நச்சினார்க்கினியர்தாமே, 'நட வா விரி ஈ கொடு கூ மே கை நோ போ வௌ என்னும் உயிர்று பதினொன்றும்...........முன்னிலை யேவலொருமை முற்றாய் நிற்கும் என்று, 'நொ' என்பதனை ஏவலாகவும் கொண்டுள்ளாரால் எனின், 'நொ' என்பது நீ நொ (வருந்து) என்றும், அவனை நொ (நோகு) என் றும் கூறத்தகுமாகலின், 'அவனை நோ' என்னுமிடத்து ஏவலும், 'நீ நொ' (நோதல் அடைவாய்) என்னுமிடத்து வியங்கோளுமாகுமாத லின், அதனை இரண்டிடத்தும் கொண்டார் எனக் கொள்க. இவ் வாறே 'நீ நீடுவாழ்' என்னுமிடத்து வாழ் என்பது வியங்கோளும், 'நீ மனைவியுடன் கூடி வாழ்' என்னுமிடத்து வாழ் என்பதுவே ஏவ லும் ஆகும். 'தாயே, சாப்பிட்டு இரண்டுநாள் ஆயின; ஒரு பிடி சோறு போடு,' 'கங்கையாடிப் போந்தேன் ஒரு பிடி சோறு தம்மின்' என்னுமிடத்து, போடு, தம்மின் என்பன இரத்தற்பொருளில் வந்த வியங்கோளும், இரப்போன்சொற் கேட்ட இல்லத்துக் கிழவன் பணி யாளனையாதல் இலாளையாதல் நோக்கி 'அவனுக்குச் சோறு போடு' என்னுமிடத்தும், [1]"மா தாங்கு எறுழ்த்தோள் மறவர்த் தம்மின்' என்னு மிடத்தும் போடு, தம்மின் என்னும் அவையே ஏவலும் ஆகும். 'கடவு ளே அடியேனைக் கா,' 'வனதேவதைகாள் இவனைக் காமின்' என்னுமிட த்து, கா, காமின் என்பனவேண்டிக்கோடற் பொருளில் வந்த வியங் கோளும், 'இக் கள்வனைக் கருத்தொடு கா,' 'காமின்கள் நெறி' என்னு மிடத்து, கா, காமின் என்னும் அவையே ஏவலும் ஆகும். இவ்வாறே பிறவுங் காண்க.

ஆசிரியர் நச்சினார்க்கினியர் ஓசைவேற்றுமையாற் [2]ககர உகரமும் றகர உகரமும் வியங்கோண் முற்றாயும் நிற்கும் என்று கூறி,

'நெடுங்தேர் தாங்குமதி வலவவென் றினிதிழிந்தனன்
'தாங்குநின் னவலம் என்றீர்'

---

1. மதுரைக்காஞ்சி 729.
2. வல்லுகரங்களுள் முதலதும் இறுதியதும் ஆகிய குறுக்களைக்கூறிய தனான் இடைநின்ற ஏனை உகரங்களும் இவ்வாறே வரும் என்பது கொள்ளலாகும்.

எனவும்,

நீ கூறும் பொய்ச்சூ ளணங்காயின் மற்றிது
யார்மேல் விளியுமோ கூறு'

எனவும் உதாரணங் காட்டினர். இவற்றுள் 'நெடுந்தேர் தாங்கு' என்பதில் 'தாங்கு' என்பது ஏவலாதற்கே அமைதி என்பது மேற் கூறப்பட்டதனான் அறியலாகும். அவர்,

'ஐய சிறிதென்னை ஊக்கி'
'ஈதன்மாட் டோத்தி பெரும'

எனவும் ககரமும் தகரமும் பெற்ற இகரம் ஏவல்கண்ணியே நிற்கும் என்று எழுதியுள்ளார். ஏவல் கண்ணும் என்றதனான், இவை ஏவல் கண்ணிய வியங்கோள் ஆதல் பெறப்படும்.

ஏவல் படர்க்கையிலும் வருதல்:—ஏவற் பொருளைத் தரும் வினைச் சொல் முன்னிலையிலன்றிப் படர்க்கையினும் வருதல் உண்டு. இது கன்னடம் முதலிய பிறமொழிகளானும் அறியலாகும். இனி, தலைவ னொருவன் தன்முன் நிற்பார் பணியாளருள் ஒருவனை நோக்கி, 'கொற் றா, நீ உழு; சாத்தன் பரம்படிக்கட்டும்; மற்றவர் நாற்றுப் பறிக்கட் டும்' என்று பணிக்கின், உழு என்னுஞ் சொல் ஏவற் பொருளதாதல் போன்று, அடிக்கட்டும், பறிக்கட்டும் என்னுஞ் சொற்களும் ஏவற் பொருளனவே யாகுமன்றோ?

இதுகாறுங் கூறியவற்றால், சொன்னிலை நோக்காது பொருணிலை நோக்கியும், கூறுவோர் கூறப்படுவோராகியோரை நோக்கியும் ஏவல் வியங்கோள்களின் வேறுபாடு அறிதல வேண்டும் என்பது நன்கு விளக்கமுறும்.

வியங்கோட்பொருளில் வருஞ் சொற்கள்: வேண்டும், தகும், படும் என்னுஞ் சொற்கள் வியங்கோட் பொருளில் வருவனவாகும். இம் மூன்றும் 'செய்ய வேண்டுவது' என்னும் பொருளவாய் ஒன்றற் கொன்று வரும் என்றார் பிரயோக விவேகநூலார். 'வஞ்சரை யஞ் சப்படும் என்பதற்கு அஞ்சத்தகும் என்பர் பேராசிரியர்; பரிமே லழகர் அஞ்சவேண்டு மென்பர். ஆதலின் கிருத்தியப் பிரத்தியயம் மூன்றும் ஒன்றற் கொன்று பிரதிபதமாய் இருதிணை ஐம்பான் மூவிடத்தினும் நிற்றலில் அநவ்விய கிருத்தாம் என்க' என்று அவர் எழுதியிருக்கின்றார். 'நலம் வேண்டின் நாணுடைமை வேண்டும்'

என்பதில் வேண்டும் என்பது விதிப்பொருட்டு என்றார் பரிமேலழகர். 'கொள்ளப்படாது மறப்ப தறிவிலென் கூற்றுக்களே' என்பதில் படாது என்பதைத் தகுதிப் பொருட்டாகக் கொண்டார் பேராசிரியர். இவற்றால் வேண்டும், தகும் படும் என்னும் மூன்றும் வியங்கோட் பொருளவே யாதல் அறியப்படும்.

ஆயின், இலக்கணக்கொத்து நூலார் 'இம் மூன்றும் (வேண்டும், தகும், படும் என்பவை) ஒருபொருட் கிளவியாய்த் தொழிற்பெய ராய்த் தேற்றப் பொருள் பட்டே நிற்கும் என்க. தேற்றப் பொருளாவது—இக் காரியஞ் செய்தலே தக்கது, தகுதி, பொருத்தம், துணிவு, தெளிவு, நன்மை, அமைதி, முடிவு, வேண்டுவது......எனப் பொருள் படுதல்' என்று எழுதி, அம் மூன்றற்கும் உதாரணங் கொடுத்து, 'இங்ஙனம் வருஞ் செய்யுட்கட்கெல்லாம் நச்சினார்க்கினியர் சேனாவரையர் பரிமேலழகர் உரையாசிரியர் முதலாயினோர் முற்றாயும் எச்சமாயும் பொருளுரைக்கின் வழுவாம் என்று கருதி வியங்கோட் பொருட்டென்றும் விதிப்பொருட்டென்றும் தகுதிப்பொருட்டென்றும் வேண்டுவதென்றும் தமக்கு வேண்டியவாறே பொருளெழுதிச் சொற்குணம் வாளாபோயினர்' என்று எழுதியிருக்கின்றார். இவர் கூற்றினும் பிரயோக விவேக நூலார் கூற்றே மேற்கொள்ளத்தக்கதும், பழைய உரையாளரால் மேற்கொள்ளப் பட்டதும், அமைவுடையதும் ஆகும்.

முடிபுரை :—இதுகாறு ஆராய்ந்தவற்றால், ஆசிரியர் தொல்காப்பியனார் முன்னிலை தன்மைகளில் மன்னாது என்று விலக்கிய வியங்கோட் கிளவி கவ்வீற்றதே என்பதும், அது படர்க்கைக்கண்ணே வரற்பாலது என்பதும், முன்னிலை தன்மைகளில் வியங்கோட் பொருளில் வேறு வேறு விகுதிகள் அமைந்துள்ளன என்பதும், அவ் விடங்களில் கவ்வீற்று வியங்கோள் வந்திருத்தல் தொல்காப்பிய விதிக்கு மாறுபட்டதுவே என்பதும், வியங்கோள் ஏவல்கட்கு வேறுபாடு இவை என்பதும் விளக்கமுறும்.

கன்னட மொழியில் வாழ்த்து முதலிய பொருள்களில் வரும் கெவ் வீற்று வினைச்சொல் இன்றளவும் படர்க்கைக்கணன்றி முன்னிலை தன்மைகளில் வழங்கப்பட்டிலது. தெலுங்கிலும் வாழ்த்து முதலிய பொருள்களில் வரும் எடுன், தன் என்னும் இவ் வீற்று வினைச்சொல் படர்க்கைக்கணன்றி முன்னிலை தன்மைகளில் வழங்கிற்றில. மலையாளத்

திலும் படர்க்கை தன்மைகளில் வரும் அட்டே என்னும் விகுதி முன் னிலைக்கண் வந்திலது. இவற்றை நோக்கின், சில நியதிகள் பிற திரா விடமொழிகளில் நிலைத்திருப்பனவாகவும், தமிழில்மட்டும் மேற் கொள்ளப்படாமல் வீழ்ந்தொழிந்தன என்பது புலனாகும். இவ வாறே, தமிழ்மொழியில் பண்டே மேற்கொள்ளப்படாத தொல்காப் பிய விதிகள் சில கன்னடம் முதலிய மொழிகளில் நிலைபெற்றுள்ளன என்பது யான் எழுதியுள்ள 'தமிழிலக்கணமும் ஏனைத் திராவிட மொழிகளும்' என்னுங் கட்டுரையினால் அறியலாகும்.

---

# ALAPEDAI

## (LENGTHENING OF THE QUANTITY OF A LETTER)

By

V. VENKATA RAJULU REDDIAR,
*Junior Lecturer in Tamil.*

There is difference of opinion between Tolkāppiyar and Pavanandi, the author of *Nannūl*, in regard to the quantity of the elongated vowel in metrical composition

Tolkāppiyar thinks that the quantity of the elongated vowel does not vary and the succeeding short vowel adds to its quantity only when metrical exigency arises

But the author of *Nannūl* is of opinion that the elongated vowel itself gets an increase in quantity while the succeeding short vowel merely indicates the increased quantity.

The view of Tolkāppiyar is in consonance with the principles of Tamil Prosody.

# அளபெடை

**By**

V. VENKATA RAJULU REDDIAR,
*Junior Lecturer in Tamil.*

## தமிழில் அளபெடை வரும் இடங்கள்

தமிழில் செய்யுட்கண் ஓசை குறைந்தவிடத்து எழுத்துக்களைக் கூட்டியும் ஒற்றியும் ஒலிப்பர்; அதற்கேற்ப எழுதுதலும் செய்வர். இவ்வாறு செய்யுளில் தளை கெடாமைப்பொருட்டுப் புலவர் அமைத்துக் கொள்ளும் எழுத்து 'அளபெடை' எனப்படும். இவ்வளபெடையைச் செயற்கையளபெடை என்பர் உரைகாரர்கள். விளி, பண்டமாற்று முதலியவற்றில் அளபெடை வருதல் உண்டு; பொருள் நன்கு புலனாதற் பொருட்டு, தண்ண்ணென்றது, கள்ள்ளென்றது என்பனபோல மெய்யெழுத்துக்களை ஒற்றிக் கூறுதலும் உண்டு. இவ்வகை அளபெடையை இயற்கையளபெடை என்பர். இவ்விரண்டற்கும் அசைகோடற்கண் வேறுபாடு உளது. அது முன்னர் அறியப்படும். இவையேயன்றி, அளபெடையோடு அமைந்துள்ள பெயர்களும் உள. இனி, வடமொழியை நோக்குவோம்:

## வடமொழியில் அளபெடை வரும் இடங்கள்

வடமொழியில் [1]சேய்மைவிளிகண் அளபெடை வரும்.

உதாரணம்—ஸக்தூங் பிப தேவதத்த!௩.

ஈண்டுத தகாரம் மூன்று மாத்திரை யொலிக்கும். [2]விளிக்கும் பொழுது ஹை அல்லது ஹே என்னுஞ் சொல்லை வழங்கின் அது மூன்று மாத்திரை யொலிக்கும்; ஆண்டுப் பெயர் மூன்று மாத்திரை ஒலித்தல் இல்லை.

ஹை!௩ ராம (ராம என்பதன் அகரம் ஒருமாத்திரையதே.)
ராம ஹே!௩ ( ,, ,, ,, )

என வரும். [3]விளிக்கண் ஒரு சொல்லின் இறுதியிலன்றிப் பிறவிடத்தினுள்ள சில 'குரு'க்களும் மூன்று மாத்திரை ஒலித்தல் உண்டு.

தே௩வதத்த!
தேவ[4]த௩த்த!

என வரும். இனி, [5]ஶூத்ரரல்லாதாருக்கு ப்ரத்யபிவாதனம் (வணங்கினோரை வாழ்த்துதல்) சொல்லுமிடத்தும் வாக்கியத்தின் இறுதியில் உயிரெழுத்து மூன்று மாத்திரை ஒலிக்கும்.

---

1. பாணினீயம். 8·2 : 84.
2. ,, 8·2 : 25.
3. ,, 8·2 : 86.
4. முன்னர், 'த்த' என்று மெய்யெழுத்தோடுகூடிய தகாரம் இருத்தலின், வ என்பதற்குமுன்உள்ள முதல் தகாரம் குரு ஆயிற்று.
5. 8·2 : 83.

ஆயுஷ்மாந் பவ ஸ்ரீதேவதத்த!௩

என்ப. இவையேயன்றி, தமிழிற் செய்யுட்கண் ஓசை குறைந்தவிடத்து அளபெடுத்தல்போன்று வடமொழியில் அளபெடுத்தல் இல்லை.

தெலுங்கு கன்னட மலையாள மொழிகளிலும் சேய்மைவிளிக்கணன்றி வேறிடங்களில் ஓரெழுத்து மூன்று மாத்திரை ஒலித்தல் இல்லை. மலையாளமொழியில்மட்டும் [1]செய்யுட்களில் குற்றெழுத்தினை நெட்டெழுத்துப்போல் ஒலித்தல் உண்டு. ஆயின், வரிவடிவில் அவ்வாறு எழுதுதல் இல்லை. இது நிற்க.

அளபெடையின் திறத்தில் தொல்காப்பியனார்கொள்கை

இனி, தமிழில் அளபெடையைக்குறித்து ஆசிரியர்தொல்காப்பியனார் கூறியிருப்பவற்றை நோக்குவோம்:

அவர், முதற்கண்,

[2]"மூவள பிசைத்தல் ஓரெழுத் தின்றே"

என்று கூறியுள்ளார். இது, [3]வடமொழியில் ஓரெழுத்தே மூன்று மாத்திரையும் ஒலிக்குமாகலின் அதனை உட்கொண்டு, தமிழ்மொழியில் அவ்வாறு ஒலித்தல் இல்லை என்று தமிழின் சிறப்பியல்பினைத் தெரித்தபடி. மேலைச்சூத்திரத்தை யடுத்து,

[4]"நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்"

என்னுஞ் சூத்திரத்தில், ஓசை குறைந்தவிடத்து நீட்டும் முறையினைக் கூறினார். அஃதாவது—ஓசை குறைந்தவிடதது நீட்டம் வேண்டுமாயின், வேண்டும் அளபுடைய எழுத்துக்களைக் கூட்டி ஒலியெழுப்புக என்பதாம். இதன் விளக்கத்தை, அஃதாவது எழுத்துக்களைக் கூட்டும் முறையை,

1. வ்ருத்த மஞ்ஜரி. பாஷாவ்ருத்தப்ர. 4.

2. தொல். நூன்மரபு. 5.

3. வடமொழியில் ஓரெழுத்து ஒருமாத்திரை ஒலிக்கின் குறில் என்றும், இரண்டு மாத்திரை ஒலிக்கின் நெடில் என்றும், மூன்று மாததிரை ஒலிக்கின் ப்லுதம் என்றும் சொல்லப்படும். இது,

'ஊ௩காலோச்ஹ்ரஸ்வதீர்க்கப்லுத:'

என்னும் பாணினீயத்தால் (1·2 : 27) அறியப்படும்.

'சேவல் நாடோறும் வைகறையி லெழுந்து சுத்தமான குரலை உடையதாய் மூன்று தடவை கூவும். அவை, முறையே குறில் நெடில் ப்லுதங்களின் அளபாகும்'. (கர்ணாடக ஶப்தாநுஶாஸன மேற்கோள்.) அஃதாவது, முறையே ஒரு மாத்திரை, இரண்டு மாத்திரை, மூன்று மாததிரை அளவிற் கூவுகின்றது என்பதாம்.

4. தொல். நூன்மரபு. 6.

'குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே'

என்னுஞ் சூத்திரத்திற் கூறியுள்ளார். ஓசை குறைந்த மொழியில் நெட்டெழுத்தின்முன் அதற்கு ஒத்த குற்றெழுத்து வந்துநின்று ஓசையை நிறைக்கும் என்பது இச்சூத்திரத்தின் பொருள். ஒத்த குற்றெழுத்து—எழுவாய்; நிறைக்கும்—பயனிலை. ஆகலின், இசை நிறைப்பது குற்றெழுத்தே என்பது தேற்றம். ஒத்த குற்றெழுத்து இல்லாத ஐகார ஔகாரங்களின்முன் முறையே இகர உகரம் வந்து இசை நிறைக்கும் என்பதனை,

[2]'ஐ ஔ என்னும் ஆயீ ரெழுத்திற்
கிகர உகரம் இசைநிறை வாகும்'

என்னுஞ் சூத்திரத்திற் கூறியுள்ளார்.

மேலைச்சூத்திரத்தில் 'குன்றிசை மொழி' என்றதனுன், இவ்வாறு வருவது செய்யுட்கண்ணே என்பது அறியலாகும். [3]பிரயோக விவேக நூலாரும் 'குன்றிசை மொழி' என்னுஞ் சூத்திரத்திற் கூறப்பட்டது செயற்கையளபெடைக்கே பொருந்தும் என்றார். வழக்கில் பொருள் புலப்பாட்டின்பொருட்டு மிக்கொலித்தலேயன்றி, மொழியில் ஓசை குறைந்ததென்று அதனை நிறைத்தற்பொருட்டு ஓரெழுத்தினைக் கூட்டி ஒலித்தல் இல்லையன்றே?

இனி, உரையாசிரியர்கள் கூறியிருப்பவற்றை நோக்குவோம்: எழுத்ததிகாரத்திற்கு உரை எழுதியோ ரிருவருள் முற்பட்டவராய இளம்பூரண அடிகளின் உரையை முதற்கண் ஆராய்வோம்:

### இளம்பூரணர்கருத்து

இவர், 'நீட்டம் வேண்டின் என்னுஞ் சூத்திரத்திற்கு, 'நீண்ட மாத்திரையை யுடைய அளபெடையெழுத்துப் பெற வேண்டின், மேற் கூறிய இரண்டளபுடைய நெடிலையும் ஓரளபுடைய குறிலையும் பிளவு படாமற் கூட்டி எழூஉக' என்று பொரு ளெழுதியிருக்கின்றார். 'நீட்டம் வேண்டின்' என்பதற்கு 'அளபெடையெழுத்துப் பெற வேண்டின்' என்பது நேர்மையான பொருளன்று. 'பிளவுபடாமற் கூட்டி எழூஉக' என்னும் பொருள் பொருந்தாமை 'குன்றிசை மொழி' என்னுஞ் சூத்திரத்தான் அறியலாகும். 'குன்றிசை மொழி' என்னுஞ் சூத்திரத்திற்கு, 'அளபெடையோசையாகச் சொல்லாதொழியிற் குன்றுவதான ஓசையை யுடைய அளபெடையெழுத்தா னய மொழிக் கண்ணே நின்று அவ் வோசையை நிறைக்கும்; அவை யாவை எனின்,

1. தொல். மொழிமரபு. 8. 2. மொழிமரபு. 9.
3. பிரயோக விவேகம். 5. உரை.

நெட்டெழுத்துக்களின் பின்னாக அவற்றிற்குப் பிறப்பானும் புணர்ச்சியானும் ஓசையானும் இனமொத்த குற்றெழுத்துக்கள்' என்று உரை எழுதியுள்ளார். இவ் வுரை அமைவுடையது. ஆயின் ஆஅ, ஈஇ என்னுந் தொடக்கத்தனவாகக் காட்டியிருக்கும் உதாரணங்களும், ஈண்டு "மொழி" என்றது, அவ் வளபெடையெழுத்து ஒருபொருள் உணர்த்தி ஓரெழுத்தோருமொழியாய் நிற்கும் நிலைமையினை' என்று எழுதியிருக்கும் விசேடவுரையும் பொருந்துவனவல்ல. செய்யுளில் ஓசை நிறைத்தற்பொருட்டு வந்துள்ள அளபெடை மொழிகளே உதாரணமாகக் காட்டற்பாலன. அவை ஓரெழுத்தொருமொழியாயே யிருத்தல் வேண்டா. மேற்சூத்திரவுரையி னிறுதியில், 'சிறுபான்மை அம்மொழி தானே எழுத்தாய் வாராது எனக் கொள்க' என்றார். ஆயின், ஓரெழுத்தொருமொழியா யிருத்தலே சிறுபான்மை. செய்யுட்களில் யாண்டு நோக்கினும் பல வெழுத்துக்களை யுடைய மொழிக்கண் அளபெடை வந்திருத்தல் காணலாம். 'தொழாஅ ரெனின்', 'கடாஅக் களிற்றின்மேல்' என்னுங் குறளடிகளைக் காண்க.

வடமொழியில் ப்லுதம்போலத் தமிழிலும் மூன்று மாத்திரை ஓரெழுத்து ஒலிக்கும் என்றும், ஆகலின் அஃது உயிரெழுத்துக்களுள் ஒருவகை ஆகும் என்றும் கொண்டு, [1]அளபெடையெழுத்தொடுகூடி எழுத்து நாற்பதாகும் என்றும், [2]'உயிரெழுத்து—குற்றெழுத்து, நெட்டெழுத்து, அளபெடையெழுத்து என மூவகைப்படும்' என்றும் எழுதுவாராயினர். ஆசிரியர், ஓசை குறைந்த சொற்களில் குற்றெழுத்து நின்று இசை நிறைக்கும் என்று கூறியிருப்ப இவர் ஓரெழுத்தே மூன்று மாத்திரை யொலிக்கின்றது என்று கூறுதலும், அவர் உயிரெழுத்துக்களைக் குறில் நெடில் என இரண்டாகப் பகுத்திருப்ப இவர் குறில் நெடில் அளபெடை என மூன்று வகையாகப் பகுத்திருத்தலும் ஆசிரியர் கருத்திற்கு அமைபவல்ல என்பது தானே போதரும்.

இனி, ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஓஒ என மூன்று மாத்திரையா யொலிப்பன ஓரெழுத்தொருமொழிகள் அல்ல. ஆ ஈ ஊ ஏ ஓ என்பனவே ஓரெழுத்தொருமொழிகள். ஆசிரியர் [3]'நெட்டெழுத் தேழே ஓரெழுத் தொருமொழி' என்று கூறியிருப்பது காண்க. ஆஅ முதலியன ஓரெழுத்தா யொலிக்குமாயின் அவை நெட்டெழுத்துக்க ளாகா; அவை நெட்டெழுத்துக்களினும் வேறு பொருள் உடையனவாதல் வேண்டும். அளபெடையெழுத்துக்குப் பொருள் இல்லையாயினும் அதற்கு முன்னுள்ள நெட்டெழுத்துக்குப் பொருள் உண்மையின் அதன் பொருளே தனக்கும் பொருளாய்ச் சொல்லாந் தன்மை எய்தி நிற்கும் எனின், அது

1. நூன்மரபு. 1 உரை. 2. செயயுளியல். 2 உரை.
3. மொழிமரபு. 10.

பொருந்தாது. அளபெடுத்தவழி முன்னைய நெட்டெழுத்தின் பொருளின் வேறுபடும் என்பது,

ஈரள பிசைக்கும் இறுதியி லுயிரே
ஆயியல் நிலையுங் காலத் தானும்
அளபெடை நிலையுங் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வரு காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்

என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படுமன்றே? அவ்வாறு ஆஅ, ஈஇ முதலியன வேறு பொருள் தருதல் அறியப்படவில்லை. இவற்றால், அளபெடையின் திறத்தில் இளம்பூரணர் கூறும் பொருள் ஆசிரியர் கருத்திற்கும் தமிழிலக்கிய வழக்கிற்கும் அமைவிலதாதல் அறியப்படும். இனி, நச்சினார்க்கினிய ருரையை நோக்குவோம்:

## நச்சினார்க்கினியர்கருத்து

நச்சினார்க்கினியர், 'மூவள பிசைத்தல் ஓரெழுத் தின்றே' எனனுஞ் சூத்திரத்தின் உரையில், 'பல எழுத்துக் கூடியவிடத்து மூன்று மாத்திரையும் நான்கு மாத்திரையும் இசைக்கும் என்றவாறு' என்று எழுதியிருக்கின்றார். இதனால், அளபெடையில் ஒன்றற்கு மேற்பட்ட எழுத்துக்கள் கூடியுள்ளன என்பது இவர்க்குங் கருத்தாதல் அறியப்படும். அவ்வெழுத்துக்கள் கூடியிருக்கு மியல்பினைத் தெரிவிக்குமிடத்து, ஆசிரியர்கருத்தின் வேறுபடுகின்றார்; அளபெடை பிளவுபடாத ஓசையது என்ற இளம்பூரணர்கருத்தினை மேற்கொண்டு, அக் கருத்தினை, [2] 'கோட்டு நூறும் மஞ்சளும் கூடியவழிப் பிறந்த செவ்வண்ணம்போல நெடிலும் குறிலும் கூடிய கூட்டத்துப் பிறந்து பின்னர்ப் பிளவுபடா ஓசையை அளபெடை என்று ஆசிரியர் வேண்டினார். இவை கூட்டிச் சொல்லிய காலத்தல்லது புலப்படா, எள்ளாட்டியவழியல்லது எண்ணெய் புலட்படாவாறுபோல' என்று உவமானம் தந்து விளக்கியுள்ளார். இக் கூற்றுப் பொருந்தாமை முன்னர் அறியப்படும்.

'குன்றிசை மொழிவயின்' என்னுஞ் சூத்திரத்தில் 'குன்றிசை மொழி' என்பது, இளம்பூரணர் கூறியவாறு ஓரெழுத்தொருமொழி எனின், மொழியின் இடை கடைகளில் வரும் அளபெடை அமையா என்று கருதி, நச்சினார்க்கினியர் 'குன்றிசை மொழி' என்பதற்கு 'இசை குன்று மொழி' என்று பொருள் கூறி, ஈண்டு, 'மொழி என்றது ...இயற்சீர்ப்பாற் படுகின்ற எண்வகை அளபெடைச்சொற்களையும் என்று எழுதி, அவ் வெட்டனையும் காட்டினார்; அன்றியும், 'மொழி என்றதற்குத் தனிநிலை ஏழனையுமே கொள்ளின், ஒழிந்த இயற்சீர்ப்பாற்

1. தொல். இடையி. 33. 2. எழுத். 6. உரை.

படும் அளபெடை கோடற்கு இடமின்மை உணர்க' என்று, இளம பூரணர்கொள்கை பொருந்தாமையும் குறித்தார்.

இவருரையிற் பொருந்தாதது அளபெடையில் பல எழுத்துக்களின் ஒலி பிளவுபடா தொலிக்கும் என்றதொன்றே. அதனை, [1] இரண்டெழுத்துக் கூடி மூன்று மாத்திரையாயிற் றெனின் இரண்டெழுத்தொலி அங்ஙனம் இன்மையின் பொருந்தாது என்று மறுத்துள்ளார் சங்கர நமச்சிவாயர்.

நன்னூலார்கொள்கை

இனி, நன்னூலார்கொள்கையினை நோக்குவோம்: நன்னூலார்,

[2] 'இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடில்
அளபெழும் அவற்றவற் றினக்குறில் குறியே'

என்னுஞ் சூத்திரத்தால், ஓசை குறையுமாயின் மொழியின் முதல் இடை கடை என்னும் மூன்றிடங்களிலும் உள்ள நெட்டெழுத்து அளபெழும். அதனைத் தெரிவித்தற்கு அவ்வந் நெட்டெழுத்தின் இனமாகிய குற்றெழுத்து அடையாளமாய் நிற்கும் என்று கூறினார். தொல்காப்பியனார் கொள்கையினை விடுத்து, இவர் இவ்வாறு கூறியதற்குக் காரணம் இளம் பூரணருரையும், வடமொழியில் ஒரெழுத்தே மூன்றுமாத்திரை யொலிக்கும் என்னுங் கூற்றுமே யாதல்வேண்டும்.

அளபெடையில் குற்றெழுத்து ஒலித்தல் இன்றி அடையாளமாய் நிற்கும் என்ற இவர்தாமே, மொழியின் ஈற்றில் நிற்கும் எழுத்துக்களைக் கூறுமிடத்து, குற்றெழுத்து அளபெடைமொழியில் ஈற்றில் நிற்கும் என்பதை,

[3] 'குற்றுயிர் அளபின் ஈறும்'

என்று கூறினார். இச்சூத்திரத்தில், 'ஒ நவ்வோ டாம்; ஔ ககர வகரமோ டாகும்' என்று கூறியனவெல்லாம் ஒலிபற்றியனவே யாதலின், 'குற்றுயி ரளபின் ஈறும்' என்றதும் ஒலிபற்றியதேயாகும். இனி, 'ஆவி ஞணநமன' என்னும் இறுதிநிலையைக் கூறுஞ் சூத்திரத்திலும், முதனிலை, இடைநிலைமயக்கம் இவை கூறுஞ் சூத்திரங்களிலும் கூறப்பட்டனவெல்லாம் ஒலிபற்றியனவே யாதல் அறிக. அன்றியும், இலக்கண நூலார் ஒலிபற்றியன கூறுதலேயன்றி வரிவடிவுபற்றியன கூறவேண்டுதல் இன்று. வடமொழியிலக்கணநூலார் வரிவடிவுபற்றியன கூறுதலே இல்லை. தமிழிலும் வரிவடிவுபற்றிக் கூறப்பட்டவை இவ்விவ் வெழுத்துப் புள்ளி பெறும் என்பதுவும், உயிரும் மெய்யுங் கூடிய எழுத்துக்களைக் குறித்தற்கண் உருவேறுபாடு வரும் என்பதுவுமே; ஏனையவெல்லாம் ஒலிபற்றியனவே.

1. நன். எழுத். 36. உரை. 2. நன். எழுத. 36. 3. நன். எழுத. 53.

'குற்றுயி ரளபின் ஈறும்', என்றதனை நோக்கின், அளபெடை-மொழியில் நெட்டெழுத்தின்முன் குற்றெழுத்து நின்று ஒலிக்கும் என்று கொண்டுள்ளார் எனப் போதரும். ஆயின், 'இசை கெடின்' என்னுஞ் சூத்திரத்தால் அளபெடைமொழியில் குற்றெழுத்து ஒலிப்பதன்று என்பது நன்கறியப்படும். இவை முன்னொடு பின் முரணுப வாகலின், [1]'அளவுகுறியாய் நிற்கும் என்ற குற்றெழுத்துக்களைக் "குற்றுயி ரளபி னீறும்" என மொழிக்கு ஈறாய் நிற்கும் என்றல் பொருந்தாது' என்று கூறினார் இலக்கணவிளக்க நூலார்.

நன்னூலார் ஓரெழுத்தே மூன்று மாத்திரை யொலிக்கும் என்னுங் கொள்கையினராகலின், அளபெடையையும் தனியெழுத்தாக எண்ணித் தொகையிட்டார். அளபெடையின் ஒலி நெட்டெழுத்தின் ஒலியின் வேறுபட்டதாகலின் அதனை வேறெழுத்தாக எண்ணுதலும் அமையு மாயினும், அஃது இசை நிறைக்க வருமிடங்களில் வேறு பொருள் தருத லின்மையின் அதனைத் தனியெழுத்தாக எண்ணுதல் அத்துணை அமைதி யன்று. இனி, அமையும் எனக் கொள்ளினும், அளபெடையெழுத்து எழு எனக் கோடலே தகுதி. மொழியின் எவ்விடத்தில் நிற்பினும் அளபெடையெழுத்து ஒருதன்மையதா யொலித்தலன்றி இடவேறு பாட்டான் ஒலிவேறுபாட்ட தாதல் இல்லையன்றே? [2]'எழுத்துப் பலவாயின ஒலிவேற்றுமையா னன்றே?' என்ற உரைகாரர்கருத்தின் படியும் ஏழு எழுத்தாக எண்ணுதலே அமையும். இலக்கணவிளக் கத்தார் அளபெடையெழுத்து ஏழு என்று கொண்டது கருதுதற் பாலது. தொல்காப்பியனார் மூன்று மாத்திரை ஒலிப்பன நெடிலுங் குறிலுமாகிய இரண்டெழுத்துக்களே என்று கொண்டாராகலின், அவர் அளபெடையெழுத்து என ஒரு வகை கொண்டிலர்.

சங்கரநமச்சிவாய ருரை

மேற்கூறியவாறு, நன்னூலார்கூற்று முன்னொடு பின் முரணுதலை ஒற்றுமைப்படுத்தல் வேண்டிச் சங்கரநமச்சிவாயப்புலவர், [3]'நெடில் அளபெடுப்புழி வரிவடிவில் அறிகுறியாய் வருங் குற்றுயிர் நெடிலொடு தொடர்ந்து உடம்படுமெய்யுடன் ஈறாந் தன்மைய தன்றித் தனித்துநிற்ற லிற் "குற்றுயி ரளபின் ஈறும்" என்றார்.... உயிர்கழிந்த உடம்பைப் "படுமகன் கிடக்கை காணூஉ" என்றாற்போல அறிகுறிமாத்திரையாய் நின்றதனை இங்ஙனம் குற்றுயிர் என்றதன்றி அஃது ஓர் எழுத்தன்றாகலின்' என்று கூறினார். இது 'ஸ்திதஸ்ய கதி: சிந்தநீயா' என்னும் நியாயத் தின்படி, ஆசிரியர் கூறியதற்கு ஒரு வழி கற்பித்தவாறே யாகும். இனி,

1. இ. வி. 19. உரை. 2. நன். எழுத். 36. உரை.
3. நன் எழுத். 53. உரை.

'குற்றுயி ரளபி னீறும்' என்னுஞ் சூத்திரம் இறுதிநிலை யெழுத்துக் களைக் கூறும் பகுதியது; வரிவடிவுபற்றிக் கூறும் பகுதியதன்று. ஆண்டுக் 'குற்றுயி ரளபி னீறும்' என்பதுமட்டும் வரிவடிவுபற்றிக் கூறுகின்றது எனின், 'மற்றொன்று விரித்தல்' என்னுங் குற்றம் நேரும். மேலும், ஈண்டு இது கூறிப் பயனின்மையின், 'நின்று பயனின்மை' என்னுங் குற்றமும் வரும். ஆகவே, உரைகாரர் ஒருகுற்றத்தை நீக்கக் கருதிக் கூறியவழி, வேறு சில குற்றம் நேர்ந்தன. இவர் கூறிய சமா தானம் அமைவுடையதன்று என்பது கருதியே, இவ்வுரையைத் திருத்திய சிவஞானமுனிவர், 'நெடில் அளபெடுப்புழி நெட்டெழுத்துத் தனியே வந்த நேரசை, குற்றெழுத்துத் தனியே வந்த நேரசை என்று கொள்ள நிற்றலின், "குற்றுயி ரளபி னீறும்" என்றார்' என்று எழுதினராவர். அதனை, அலகிடு முறைபற்றிக் கூறுமிடத்து ஆராய்வோம்.

இனி 'இசைகெடின்' என்னுஞ் சூத்திரத்திற்குச் சங்கரநமச் சிவாய ரெழுதியிருக்கும் உரையை நோக்குவோம்: அச் சூத்திரவுரை யில், 'ஆசிரியர்தொல்காப்பியரும் "குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும் நெட்டெழுத்து" என்றும், அவற்றின்பின் அறிகுறியாய் வரும் ஒத்த குற்றெழுத்து என்றும் கூறினரன்றே!' என்று எழுதி யுள்ளார். அவர் கூறுமாறு, 'நின்றிசை நிறைக்கும் நெட்டெழுத்து' என்று பிரித்தால, பின்னர் எஞ்சியிருப்பது 'இப்பர் ஒத்த குற்றெழுத்தே' என்பதுவே. இதற்குப் பொருள் யாது? அறிகுறியாய் வரும் என்பது யாதனுற் கொள்ளப்படும்? சொல்லெச்சத்தால் அப்பொருள் கொள்ளி னும் நெட்டெழுத்து இசை நிறைக்கும் என்று பொருள்படுதலின், நெட்டெழுத்து மூன்று மாத்திரை ஒலிக்கும் என்பது போதருமே. ஆசிரியர்,

'மூவள பிசைத்தல் ஓரெழுத தின்றே'

என்று கூறியிருத்தலின், நெட்டெழுதமே நீண்டிசைக்கும் என்பது அவர்கருத் தாகுமா? அன்றியும், அது கருத்தாயின், 'நீட்டம் வேண்டின் வேண்டுமவ் வளவு கூட்டி எழூஉதல்' என்றன்றே கூறியிருப்பர்? அதற் கேற்ப, 'குன்றிசை மொழிவயின்' என்னுஞ் சூத்திரத்திலும் கூறியிருப் பர். 'அவ்வள புடைய கூட்டி எழூஉதல்' என்று கூறுவாரோ? 'அளபு டைய' என்பது அளபுடையவற்றை; அளபுடைய எழுத்துக்களை என் றன்றே பொருள்படும்? இது, நெட்டெழுத்தே நீளும் என்னும் நன் னூலார்கருத்திற்கு நேர்மா றன்றோ? இக் கூறியவற்றால், சங்கரநமச் சிவாயர் 'குன்றிசை மொழி' என்னுஞ் சூத்திரத்தைச் சிதைத்துக் கூறிய பொருள் சிறிதும் அமைவுடைய தன்றாதல் நன்கறியப்படும்.

1. நன். எழுத். 36 உரை.

### சிவஞானமுனிவர்கருத்து

இனி, சிவஞானமுனிவர் எழுதியிருப்பதனை நோக்குவோம்: அவர் நன்னூல்விருத்தியுரையில், [1] "ஆசிரியர்தொல்காப்பியரும், நீரும் நீரும் சேர்ந்தாற்போல நெட்டெழுத்தோடு குற்றெழுத்து ஒத்து நின்று நீண்டு இசைப்பதே அளபெடை யென்பார், "குன்றிசை மொழிவயின்...ஒத்த குற்றெழுத்தே" என்றார்... இப்பெற்றி அறியாதார் நெடிலும் குறிலும் விரலும் விரலும் சேர நின்றாற்போல இணைந்துநின்று அளபெடுக்கும் எனத் தமக்கு வேண்டியவாறே கூறுப' என்று எழுதியுள்ளார். நீரும் நீரும் சேர்ந்தாற்போல நெட்டெழுத்தோடு குற்றெழுத்துக் கலந்து நீண்டிசைக்கும் என்பது 'குன்றிசை மொழி' என்னுஞ் சூத்திரத்தால் பெறப்படுமா? 'நெட்டெழுத் திம்பர் ஒத்த குற்றெழுத்து நின்று இசை நிறைக்கும்' என்றதனுன், ஒத்த குற்றெழுத்து நெட்டெழுத்தின்முன் தனியே நின்று ஓசை நிறைக்கும் என்பது போதருமேயன்றி, குற்றெழுத்து நெட்டெழுத்தோடு இரண்டறக் கலந்து நீண்டொலிக்கும் என்பது எவ்வாற்றானும் போதருதல் இல்லை. ஆசிரியர்கருத்து அதுவாயின், நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் ஒருங்கு கலந்து இசை நிறைக்கும் என்றன்றே கூறியிருப்பர்? அவ்வாறன்றி, நெட்டெழுத்திம்பர்க் குற்றெழுத்து நின்று இசை நிறைக்கும் என்றதனுன், அவர்கருத்து அஃதன்றுதல் வெள்ளிடை மலைபோல் விளக்கமுறும். எழுத்தெடை என்னுது அளபெடை என்றதனுன், நெடிலும் குறிலும் வேறுநின் றொலிக்கும் என்பது பொருந்தாது என்றதுவும் அமைவதன்று, அளபெடை என்பதற்கு அளபின்பொருட்டு எழுந்த எழுத்து என்பதே பொருளாகலின். இது முன்னர் விளக்கிக்கூறப்படும்.

சூத்திரவிருத்தியில், [2] "அளபெடை—அங் நெட்டெழுத்தோடு குற்றெழுத்து ஒத்து நின்று நீண்டிசைப்ப தொன்றுயினும் மொழிக் காரணமாய் வேறு பொருள் தாராது இசை நிறைத்தன்மாத்திரைப் பயத்ததாய் நிற்றலின் வேறெழுத்தென எண்ணப்படாதாயிற்று' என்று, இளம்பூரணர் நச்சினார்க்கினியர் இவர்தம் கொள்கையை மறுத்துக் கூறினர். நெடிலும் குறிலும் நீரும் நீரும் சேர்ந்தாற்போலச் சேர்ந்து மூன்று மாத்திரை ஒலிக்குமேல் அதனைத் தனியெழுத்தாகவே கொள்ளுதல் வேண்டும். அன்றியும், அளபெடுத்து ஓசை மிக்கொலிக்குமேல் அது வேறு பொருள் தரும் என்றலே ஆசிரியர்கருத்தாதல் மேலே கூறப்பட்டுளது. ஆகலின், ஓசை குறைந்த மொழியில் நெட்டெழுத்தின் பொருளிலேயே அளபெடை நிற்கும் என்பது சிறிதும் அமையாது. இதுகாறுங் கூறியவாற்றால், சிவஞானமுனிவர், ஆசிரியரிருவர்கொள்கை

1. நன். எழுத். 36 உரை
2. பக். 24.

யையும் ஒற்றுமைப்படுத்தக் கருதிக் கூறிய உரை அமைவுடையதன்றுதல் அறியப்படும்.

தொல்காப்பியனாரும் நன்னூலாரும் வேறு வேறு கொள்கையினரா யிருத்தல் குற்றமன்று. அவ்வாறு வேறுபட்ட இருகொள்கையையும் ஒன்றே என்று சாதிக்க முற்படுவதுதான் குற்றமாகும்.

## நேமிநாதநூலார்கொள்கை

நேமிநாதநூலார் [1] 'அளபெடைகள் சொல்லொற்றி நீட்டத் தொகும்' என் றித்துணையே அளபெடையைக்குறித்துக் கூறியுள்ளார்; நீட்டும் முறைமையைக் கூறிற்றிலர். ஆயின், [2] 'மூன்றளபு' என்று மாத்திரை கூறியிருத்தலின், அவர் நன்னூலார்கொள்கையின ராவார்; அன்றியும், எழுத்ததிகாரத்தில் வடநூலிலக்கணம் சிலவற்றையும் கூறியிருத்தலின் வடநூற்கொள்கைப்படி ஒரெழுத்தே மூன்று மாத்திரை ஒலிக்கும் என்று கொண்டாருமாவார். உரைகாரர், 'ஒற்றுக்கள் ஊன்றிச் சொல்ல அளபெழும்; அவை ஒற்றளபெடையாம். நெட்டெழுத்து நீட்டிச் சொல்ல அளபெழும்; அவை உயிரளபெடையாம்' என்று எழுதியுள்ளார். அன்றியும் அவர், அளபெடை இருபத்தெட்டு என்று கூறி, அதற்குக் 'குன்றிசை மொழி', 'ஐஔ என்னும் ஆயீரெழுத்திற்கு' என்னுஞ் சூத்திரங்களை மேற்கோளாகக் காட்டியிருக்கின்றார். இச் சூத்திரங்களால் அளபெடை ஓரெழுத்து என்பதும், அதன் விரி இருபத்தெட்டு என்பதும் பெறப்படுமாறில்லையாகலின், இவற்றைக் காட்டியது பயனில் செயலே. இனி, இலக்கணவிளக்க நூலை நோக்குவோம்:

## இலக்கணவிளக்கநூலார்கொள்கை

இசைகெடின் மொழிமுத லிடைகடை நெடில்வழித்
தத்த மொத்த குற்றெழுத் தோடள
பெழூஉம் ஐஔ இஉ என்னும்
ஆயீ ரெழுத்தோ டளபெழும் என்ப'

என்பது இலக்கணவிளக்கத்தில் அளபெடையைப்பற்றிக் கூறுஞ் சூத்திரம். இதனால், ஓசை குன்று மொழியில் நெட்டெழுத்துக்கள் தமக்குப் பின் நிற்குங் குற்றெழுத்துக்களோடு கூடி மிக்கொலிக்கும் என்பது போதரும். இச் சூத்திரவுரையில், 'கோட்டுநூறும் மஞ்சளுங் கூடிய வழிப் பிறந்த செவ்வண்ணம்போல நெடிலுங் குறிலுங் கூடிய கூட்டத்திற் பிறந்து, பின் பிளவுபடாது ஒலிக்கின்றது' என்றும், 'எள்ளாட்டிய வழியல்லது எண்ணெய் புலப்படாவாறுபோல நெடிலுங் குறிலுங் கூடிய

1. எழுத். 3. 2. எழுத். 5. 3. இ. வி. எழுத். 19.

கூட்டத்தல்லது புலப்படாது நிற்பது என்றும் எழுதியிருப்பவை நச்சினார்க்கினியத்தனவே. இச் சூத்திரத்தையும் உரையையும் நோக்கின், தொல்காப்பியச் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினிய ரெழுதியிருக்கும் உரையை மேற்கொண்டுள்ளார் இவ்வாசிரியர் என்பது நன்கறியப்படும். நச்சினார்க்கினியருரை தொல்காப்பியனார்கருத்திற் கொத்ததன்று என்பது மேலே கூறப்பட்டதாகலின், இதுவும் அமையாதென்பது கூறாமலே விளங்கும்.

### இக்காலத்தவர் கூறுவது

இனி, அளபெடையைக் குறித்து இக்காலத்தவர் கூறுமவற்றை ஆராய்வோம்: தொல்காப்பிய சூத்திரவுரைகாரரிருவரும் அளபெடையின் திறத்துக் கூறியவுரை பொருந்தாது என்று கூறப்புக்காரொருவர் [1]கூறியிருப்பவை:

1: ஓரெழுத்தினையே வேண்டியவளவு நீட்டலாமாதலானும், மற்றோரெழுத்தினைக் கூட்டி நீட்டவேண்டும் என்னும் யாப்புறவின்மையானும், ஈரெழுத்துக் கூடி நீளும் என்றல் பொருந்தாது. (பக். 280).

2. இரண்டெழுத்துக் கூடி ஒலிக்குங்கால் எவ்வள வொலிக்கும் என்பது தெரிய வாராது. அதனால், மூன்று மாத்திரையின் மிக்கொலிக்கும் என்பதும் படும். (பக். 280).

3. ‘அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்’ எனவும், ‘நீட வருதல் செய்யுளு ளுரித்தே’ எனவும், ‘உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்’ எனவும், ‘மகர உகரம நீடிட னுடைத்தே’ எனவும், ‘ஆறென கிளவி முதனீ டும்மே’ எனவும், ‘முதனிலை நீடினும் மான மில்லை’ எனவும் ஆசிரியர் கூறுதலின், ஓரெழுத்தே நீளும் என்பதன்றி, இரண்டெழுத்துக் கூடி நீளும் என்பது ஆசிரியர்கருத் தன்று. ஆகலின், அளபின்பொருட்டுக் கூட்டிய எழுத்துக்கள் வரிவடிவில் அறிகுறியாய் வரும். (பக். 281).

4. ஆகாரம் ஒருமாத்திரை நீளுங்கால் அகரவடிவாயே நீடலின் அகரம் வரிவடிவில் எழுதுவதாயிற்று. ஆகாரம் நீளுங்கால் ஒருமாத்திரை நீண்டு அகரமாய் நின்று ஒலிக்கும் என்பதுபற்றியே, ‘குன்றிசை மொழிவயின்... ஒத்த குற்றெழுத்தே’ என்றார். குற்றெழுத்து இசை நிறைக்கும் என்றதனான், அக் குற்றெழுத்து எழுத்தாகக் கொள்ளப்படாதென்பதும், ஒலிவடிவில் அவ் வளபெடையோசை அவ்வவ் வினவெழுத்தாய் நீண்டொலிக்கும் என்பதும் கூறினாராயிற்று. ஆகவே, குற்றெழுத்து ஒலிவடிவில் நெட்டெழுத்தின் பின் நின்று இசை நிறைக்கும்;

1. செந்தமிழ். தொகுதி 26. பக்கம் 279–86.

வுரிவடிவில் நெட்டெழுத்து அவ்வவ் வினமாய் நீண்டொலிக்கும் என்ப தற்கும், மாத்திரைக்கும் குறியாய் நிற்கும் என்பன தாமே போதரும். (பக். 282, 3). இச்சூத்திரத்திற்கு நெடிலும் குறிலுமாகிய இரண்டெழுத் துங்கூடி ஒலிக்கும் எனப் பொருள் கூறின் ஆசிரியர்கருத்தொடு முரணுத லன்றி, ஆசிரியரையும் பிழைபடுத்துவதாக முடியும். (பக். 285).

5. 'நீட்டம் வேண்டின்' என்னுஞ் சூத்திரத்திற்கு, 'ஓரெழுத்து முன்னையினும் மாத்திரை மிக்கொலித்தலை விரும்பின் விரும்பிய மாத் திரையையுடைய எழுத்துக்களை அவ் வளவின்பொருட்டு அவ்வெழுத் தோடு கூட்டி அவ் வளபாக அவ்வெழுத்தின் இசையை எழுப்புக' என் பதே பொருள். 'நீட்டம் வேண்டின்', 'எழூஉதல்' என்பவற்றை உற்று நோக்கின், ஒன்றே தன் இசை நீண்டு ஒலித்தலன்றி, இரண்டு கூடி நீண்டிசைத்தல் என்பது பொருந்தாமை தானே போதரும். (பக். 280, 1).

இனி, இவற்றை முறையே நோக்குவோம்:

1. ஆசிரியர் மூன்று மாத்திரை ஒலிப்பதோரெழுத்து இல்லை என்று கூறி, இசை குறைந்தவிடத்து நீட்டம் வேண்டின் அவ் வளபுடைய எழுத்துக்களைக் கூட்டி ஒலித்தல் வேண்டும் என்றும் நெட்டெழுத்தின் முன் ஒத்த குற்றெழுத்து நின்று இசை நிறைக்கும் என்றும் கூறியிருத் தலின், ஓரெழுத்தையே வேண்டுமளவு நீட்டலாம் என்பதும் இரண் டெழுத்துக் கூட்டி நீட்டவேண்டும் என்னும் யாப்புறவில்லை என்பதும் எவ்வாறு அமையும்?

2. நெடிலுங் குறிலும் ஆகிய இரண்டெழுத்தினைக் கூட்டி ஒலிக் கின் மூன்று மாத்திரை யொலிக்கும் என்பது சிறாரும் அறிவராகலின், எவ்வள வொலிக்கும் என்பது அறியப்படா தென்றது பொருந்தாது. இனி, ஓரெழுத்தினையே நீட்டுதல் வேண்டும் என்னுங் கூற்றில்தான் எவ்வள வொலிக்கும் என்பது தெரியவாராது; மூன்று மாத்திரையின் மிக்கொலிக்கும் என்பதும் படும்.

3. 'அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்' என்றது இசை நூல் வழக்கு. அதனை 'இசையோடு சிவணிய நரம்பின் மறைய' என்று ஆசிரியர் தெரிவித்துள்ளார். 'நீட வருதல்' என்பது முதலாகக் காட் டப்பட்டனவெல்லாம் இயல்பினுதல் விதியினுதல் குறிலாயிருக்கும் எழுத்துக்களைப்பற்றியனவே. ஓரெழுத்து இரண்டு மாத்திரை யொலிக்குமாகலின், அக் குறில்கள் நீளும் என்ருர். அவ்வாறு ஆசிரியர், குன்றிசை மொழியில் நெட்டெழுத்து நீளும் என்றிலர். 'குன்றிசை மொழி' என்னுஞ் சூத்திரத்திற்கு இவர்தாமே, [1]'இசை குன்றிய

1. செந்தமிழ். 26. பக்கம் 281.

மொழியினிடத்து நெட்டெழுத்துக்குப் பின்னே அதனோ டொத்த குற்றெழுத்து நின்று அவ்விசையை நிறைக்கும்' என்று உரை கூறியுள்ளாராகலின், 'ஓரெழுத்தே நீளுதலன்றி இரண்டெழுத்துக் கூடி நீளும் என்பது ஆசிரியர்கருத்தன்று' என்றது மறதியின் செயலோ, யாதோ, தெரிகிலது.

4. ஆகாரம் ஒருமாத்திரை நீளுமிடத்து அகரவடிவாயே நீளுமாயின், அவர் காட்டிய 'நீட வருதல்' என்னுஞ் சூத்திரத்தின்படி, சுட்டாகிய அகரம் ஒருமாத்திரை நீளுமிடத்து அகரவடிவாயே நீளுமன்றோ? ஆண்டு அறிகுறியாக அகரம எழுதப்படவில்லையே. 'ஆவயினானை' என்னுமிடத்து ஆகாரவொலியேயன்றி அகரவொலி கேட்கப்படுதலும் இல்லையன்றோ? உயிரளபெடையில நெட்டெழுத்தின் இறுதியில் ஒத்த குற்றெழுத்தின் ஒலி உளது என்றும், அதனானே வரிவடிவில் ஒத்த குற்றெழுத்து எழுதப்படுகின்றது என்றும் கூறுபவர், அளபெடை ஓரெழுத்தே என்றும், இரண்டெழுத்துக் கூடி ஒலிக்கும் என்றல் ஆசிரியர்கருத்தொடு முரணும் என்றும் கூறுதல் எத்துணை முரண்பாடு! 'அளபெடையில் ஒலிவடிவிலும் குறில் உளது; வரிவடிவிலும் குறில் உளது' என்று கூறிக்கொண்டே ஆண்டுக் குற்றெழுத்து இல்லை என்பவர் பின்னை யாதுதான் கூறார்!

5. ஓரெழுத்து முன்னையினும் மாத்திரை மிக்கொலித்தலை விரும்பின் விரும்பிய மாத்திரையுடைய எழுத்துக்களை அவ்வெழுத்தோடு கூட்டி எழுப்புக' என்று உரைகூறியவர், ஆண்டே—அப்பொழுதே—ஓரெழுத்தே இசை நீண்டு ஒலித்தலன்றி, இரண்டு கூடி இசைத்தல் பொருந்தாது என்றாராயின், அவர்கூற்றுப் பன்னப் பெறுமோ என்று விடுக்கற்பாலதே யாகுமன்றோ?

இக் கூறியவற்றால், [1] 'அளபெடைகள் இரண்டெழுத்து மயங்கிய மயக்கம் அல்ல; முன்னைய எழுத்தின் ஓசையை மிகுவிப்பதே அளபெடை' என்பார்கூற்றும் ஆசிரியர்தொல்காப்பியனார்கொள்கைக்குட் பொருந்தாது என்பது தானே போதரும்.

தொல்காப்பியனார் இசை குறைந்தவிடத்துக் குற்றெழுத்து வந்து நின்று இசையை நிறைக்கும் என்றார். நன்னூலார் ஆண்டு நெட்டெழுத்தே நீண்டிசைக்கும் என்றார். தொல்காப்பிய எழுத்ததிகார வுரைகாரரிருவரும் நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் பிளவுபடாது இசைக்கும் என்றனர். இம் மூன்றற்கும் புறம்பே நான்காவதொரு கொள்கையைக் கூறி 'இதுவே தொல்காப்பியர்முதலியோர்கருத்து

1. தமிழ்ப்பொழில். 14. பக்கம் 27.

என்போரது சாகசச்செயல் என்னே அது, தமது கொள்கை 'எனின் யான ஒனறும கூறேன்.

## உயிரளபெடையின் வகை

நன்னூலார் சார்பெழுத்தின் தொகை கூறுமிடத்து, உயிரளபெடை இருபத்தொன்று என்று கூறினர். மயிலைநாதர் அவ்விருபத்தொன்றற்கும் உதாரணம் காட்டினர். உயிரளபெடை இருபத்தெட்டு என்று கூறும் நூல்களில் அவ் விருபத்தெட்டற்கும் உரைகாரர் உதாரணங் கொடுத்துள்ளனர். சங்கரநமச்சிவாயரும் 'இடவகையான் உயிரளபெடை எழுமூன்றாய் வருமாறு காண்க' என்று எழுதியிருக்கின்றார். அவர், 'இசை கெடின்' என்று பொதுப்படக் கூறினமையான், இன்னிசை நிறைப்ப வருவனவும் சொல்லிசை நிறைப்ப வருவனவும் கொள்க என்று எழுதியதனன், சிவஞானமுனிவர் நன்னூல்விருத்தியுரையில், 'ஒளகாரம் மொழியிடை கடைகளின் வரப்பெறாமையின் அவ்விடங்களின் அஃதொழிய நின்று அளபெடுக்கும் அளபெடை பத்தொன்பதோடு இன்னிசை நிறைப்பவும் சொல்லிசை நிறைப்பவும் அளபெடுக்கும் அளபெடை இரண்டுங் கூட்டி உயிரளபெடை எழுமூன்றாய் வருமாறு காண்க' என்று எழுதுவாராயினர். இது நன்னூலார்கருத்திற்கு ஒத்ததாதல் இல்லை. ஆயின், ஒளகாரம் மொழியின் இடையிலும் கடையிலும் நில்லாதாகலின், அளபெடை இருபத்தொன்றாதல் இன்றால் எனின், பழைய உரைகாரர் பலரும் ஒளகாரம் மொழியின் இடையிலும் கடையிலும் அளபெடுத்தற்கு உதாரணங் காட்டியிருத்தலின், நன்னூலாரும் அக்கருத்தின ராவார். இனி, இடையெழுத்தோடு தொடராத டுகர றுகரங்களை நீக்காது குற்றியலுகரம் ஆறு என்றதுபோன்று, இடையிலும் கடையிலும் வாராத ஒளகாரத்தையும் நீக்காது உயிரளபெடை எழுமூன்று என்றார் எனக் கொள்ளுதலும் ஆம். அவ்வாறு கோடலினும், இன்னிசை சொல்லிசை என இரண்டளபெடைகளைக் கொண்டால் என்னை எனின், அவை, இசை நிறைக்க வந்த அளபெடைகளின் ஒலியினும் வேறுபட்ட ஒலியினவல்லவாகலானும், இடத்தானும் மொழியின் இடை கடையன்றி வேறிடத்தனவல்லவாகலானும், அவற்றை வேறாக எண்ணுதற்குப் போதிய நியாயம் இல்லை என்க. அன்றியும், ஒலி வேற்றுமையானே எழுத்துப் பலவாயின என்றதை உடன்பட்ட அவர்தாமே ஒலிவேற்றுமையோடு இடவேற்றுமையும் இல்லாத எழுத்தினை வேறாக எண்ணித் தொகை கோடல் பொருந்தாதன்றே? சொல்லிசையளபெடை என ஒன்று கொள்ளின், இயல்பாகவே அளபெடையோடிருக்குங் குரீஇ, மகாஅர் என்பனபோல்பவற்றை இயற்கையளபெடை எனக் கொள்ளுதல் வேண்டும். குரீஇ என்பதுபோல்பவற்றை இயற்கையளபெடை என்றே கொண்டனர் பேராசிரியர்முதலியோர். ஆகலின்,

உயிரளபெடை இருபத்திரண்டாதல் வேண்டும். அவ்வாறு அதனைக் கொண்டிலராகலின், சொல்லிசையளபெடை என்றும், இன்னிசையளபெடை என்றும் வேறு பெயர் கொடுத்து அமைத்தல் நன்னூலார் கருத்திற்கு அமைவதன்று.

அளபேடை என்பது யாது?

அளபெடை' என்னும் பெயர் பெறுவது யாது என்பதை ஈண்டு ஆராய்வோம்: யாப்பருங்கல முடையார்,

தளைசீர் வண்ணந் தாம்கெட வரினே
குறுகிய இகரமும் குற்றிய லுகரமும்
அளபெடை யாவியும் அலகியல் பிலவே'

என்று கூறியுள்ளார். இச் சூத்திரத்தில், குறுகியஇகரம் குற்றிய லுகரம் அளபெடையாவி என்பன எழுவாய்; அலகியல்பில என்பது பயனிலை. ஆகலின், தளை முதலியன கெடுமிடங்களில் அலகுபெறாது நிற்கும் உயிரெழுத்து அளபெடை என்னும் பெயர் பெறும் என அறியப் படும். இனி, விருத்திகாரர் கொடுத்துள்ள உதாரணங்களை நோக்குவோம்:

குற்றியலிகரம் அலகு பெறுததற்கு உதாரணம்:

'குழலினி தியாழினி தென்பதம் மக்கள்'

இதில், 'தி' அலகு பெற்றிலது.

குற்றியலுகரம் அலகு பெறுததற்கு உதாரணம்:

'கொன்றுகோடுநீடு குருதி பாயவும்'

இதில், 'று', 'டு'க்கள் அலகு பெற்றில.

அளபேடை அலகு பெறுததற்கு உதாரணம்:

'உப்போஒ எனவுரைத்து மீள்வாள்'

இதில், 'ஒ' அலகு பெற்றிலது. [போ—அலகு பெற்றது.]

'பிண்ணாக்கோஒ என்னும் பிணாவின் முகத்திரண்டு'

இதில், 'ஒ' அலகு பெற்றிலது. [கோ—அலகு பெற்றது.]

'நாரோஒநா றென்பா னுடங்கிடைக்கும்'

இதில், 'ஒ' அலகு பெற்றிலது. [ரோ—அலகு பெற்றது.]

'களிச்சாத்தாஅ என்றியான் கட்காண நின்று'

இதில், 'அ' அலகு பெற்றிலது. [தா—அலகு பெற்றது.]

இக் காட்டிய காட்டுக்களிலெல்லாம் குற்றெழுத்தே அலகு பெற்றிலாதது காண்க. குற்றியலிகரம் குற்றியலுகரம் அலகு பெறாதன போன்று, அளபெடையுதாரணங்களில் குறிலே அலகு பெற்றிலது.

1. யாப்பருங்கலம். 5.

ஆசிரியர்கூற்றானும், விருத்திகாரர், 'உயிரளபெடைகளை இவ்விலக்கணத்தால் அலகுபெறா என்று களைய, வண்ணம் சிதையாதாம்' என்று எழுதியிருப்பதனானும், அளபெடை என்பது பொருள் புலப்பாட்டிற்குத் தோன்றிய குற்றுயிரே யாதல் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள்ளிதின் அறியப்படும். காரிகையில், [1] 'சீரும் தளையும் சிதையிற் சிறிய இஉ அளபோ, டாரும் அறிவர் அலகு பெறுமை' என்றது இதனை வலியுறுத்தும்.

இனி, [2] 'அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே'

என்னுஞ் சூத்திரத்தான், ஆசிரியர்தொல்காப்பியனார்கருத்தும் இதுவே யாதல் அறியப்படும். அளபெடை அசையின் நிலைய தாதலும் உண்டு என்பது இச்சூத்திரத்தின் பொருள். உம்மையான், அசையின் நிலைய தாகாமையும் உண்டு என்பது போதரும். எவ்விடத்தில் அசையின் நிலையது ஆகும்? எவ்விடத்தில் ஆகாது என்பதனை நோக்குவோம்:

'கடாஅ உருவொடு கண்ணஞ்சா தியாண்டும்'

என்னுமிடத்தில் அளபெடை அசைநிலை ஆயிற்று. 'அளபெடை அலகு பெற்றது' என்று இளம்பூரணவடிகள் எழுதியிருப்பது காண்க.

'களிச்சாத்தாஅ என்றியான் கட்காண நின்று'

என்னுமிடத்தில் அளபெடை அசைநிலை ஆயிற்றிலது. பண்டமாற்று, நாவல்கூற்று முதலிய இடங்களில் வரும் அளபெடையும் பெரும்பாலும் அலகு பெறாது.

'உப்போஒ எனஉரைத்து மீள்வாள்'

'இதன்கண் அளபெடை அசைநிலையாகி அலகுபெறா தாயிற்று' என்று இளம்பூரணர் எழுதியிருப்பதுங் காண்க. ஆயின், இத்தகைய விடங்களில் அளபெடை கோடல் எற்றுக்கெனின், அளபெடை கொள்ளாக்கால் செய்யுளுட் கருதிய பொருண்மை விளங்காது. ஆகலின், செய்யுளின்பம் சிதையாவாறு அளபெடை கொண்டு, அலகிடுகைக்கண் அதனை அசையாகக் கொள்ளாது விடப்படும். [3] 'பரவைவழக்கினுள் விளியும் பண்டமாற்றும் நாவல்கூறலும் அவலமும் அழுகையும் பூசலிடுதலும் முறையிடுதலும் முதலாயவற்றுள் அளபெடுத்த மொழிகள் செய்யுளகத்து வந்து உச்சரிக்கும்பொழுது அளபெடா என்பது இலக்கணம் இன்மையின் செய்யுளகத்து வந்து, தளைசீர் வண்ணம் கெட நின்றால் அலகுபெறா' என்றும்,

'மாத்திரை வகையால் தளைதம கெடாநிலை
யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்

1. யாப். காரிகை. ஒழிபி. 1. 2. செய். 17. 3. யாப். கலம். 4. உரை.

என்றாராகலின், கூட்டவும் விலக்கவும் பட்டது' என்றும் யாப்பருங்கல விருத்திகாரர் எழுதியிருப்பவை நோக்கத் தக்கன.

ஆயின், பண்டமாற்றுமுதலியவற்றில் வந்த அளபெடை அலகு பெற்றுளது யாண்டோ எனின்,

'நாவலோஒ என்றழைக்கும் நாளோதை'

என்னும் அடியில், 'நாவலோஒ என்புழி உயிரளபெடை தளைசீர் வண்ணங்களோடு மாறுகொள்ளாது நின்று அலகு பெற்றவாறு' என்று யாப்பருங்கலவிருத்திகாரர் எழுதியிருப்பது காண்க.

இதுகாறுங் கூறியவற்றால், உயிரளபெடையில் இசைநிறைத்தற்கு வருங் குற்றெழுத்தே அளபெடை எனப்படும் என்பது தேற்றமுறும். டாக்டர், ஸ்ரீ, பி. எஸ். சுப்ரமணியசாஸ்த்ரியாரவாகளும் இங்கனமே எழுதியிருக்கின்றார்கள்.[1] ஒற்றளபெடையிலும் தோன்றிய மெய்யே அளபெடை எனப்படும். இது முன்னர் அறியப்படும்.

அளபேடைமோழியை அலகிடு முறை

தொல்காப்பியனார் கூறியவாறு அளபெடைமொழியில் நெடிலுங் குறிலும் தனித்தனியே நின்று ஒலித்தலானே உரைகாரர் அவற்றை இரண்டெழுத்துக்களாக எண்ணுதல் அமைவதாயிற்று. அம் முறையினானே,

'தேஎந் தேரும் பூஉம் புறவில்
போஒரி துள்ளுஞ் சோஒரி நண்ணிக்
குராஅம் பிணையல் விராஅங் குஞ்சிக்
குடாஅரிக் கோவல ரடாஅரின் வைதத'

என்னும் அடிகளில்,

தேஎம், பூஉம் என்பவை தேமாச் சீரும்,
போஒரி, சோஒரி என்பவை கூவிளச் சீரும்,
குராஅம், விராஅங் என்பவை புளிமாச் சீரும்,
குடாஅரி, ரடாஅரின் என்பவை கருவிளச் சீரும்

ஆயின. 'அற்றன்று; "மாத்திரை வகையால் தளைதம கெடாநிலை, யாப்பழியாமையென் றளபெடை வேண்டும்" என்பவாகலானும், "எழுத்திற்கு மாத்திரைகோடலும் அசைத்தலும் சீர்செய்தலும் தளையறுத்தலும் ஓசைபற்றியல்லது எழுத்துப்பற்றியல்ல" வாகலானும், மூன்று மாத்திரை ஒலிக்கும் ஓரெழுத்தினையே இரண்டுமாத்திரையும் ஒருமாத்திரையுமாகப் பிரித்து அசைகோடல் கூடும்' எனின், அது பொருந்தாது. என்னை எனிற் கூறுவேன்.

1. தமிழ்மொழிநூல். பக். 56.

'மாத்திரை வகையால்' என்னுஞ் சூத்திரம், மாத்திரை வகையினுல் தளை கெடாதநிலையில் யாப்புக்கெடாமைப்பொருட்டு அளபெடுத்தல் வேண்டும் என்று, அளபெடுத்தலின் இன்றியமையாமையைக் கூறுவதேயன்றி, மாத்திரை வகையான் அசை முதலியன கோடல்வேண்டும் என்று கூறுவதன்று. இவ் வுண்மை இச் சூத்திரத்தைப் பலவிடத்தும் எடுத்தாண்ட யாப்பருங்கலவிருத்திகாரர், [1]'அளபெடை யாவன— மாத்திரை குன்றலின் சீர் குன்றித் தளைகெட நின்றவிடத்து, யாப்பழியாமைப்பொருட்டு வேண்டப்பட்டன. என்னை? "மாத்திரை வகையால்—வேண்டும்" என்றாராகலின்' என்றும், [2]'கடாக்களிற்று, படாமுலை என்று அளபெடாதே தத்தம் பொருளைப் பயக்குஞ் சொற்கள் ஒருகாற் செய்யுளகத்து வந்து மாத்திரை சுருங்கிச் சீருந் தளையும் சிதைய வந்தால், "கடாஅக் களிற்றின்மேல் கட்படா மாதர், படாஅ முலைமேற் றுகில்" என்று சீரும் தளையும் சிதையாமே அளபெடுக்கும். "நிலம்பாய்ப்பாய்ப் பட்டன்று நீலமா மென்றோள், கலம்போய்ப் போய்க் கௌவை தரும்" என்றித்தொடக்கத்தன மாத்திரை சுருங்கிச் சீருந் தளையும் சிதையநில்லாவாகலின் அளபெடா என்பது. என்னை? "மாத்திரை வகையால்...வேணடும்" என்றாராகலின்' என்றும் எழுதியிருப்பவற்றான் நன்கு அறியலாகும்.

இனி, மாத்திரை வகையால் அசைகோடல் வேண்டும் என்று தொல்காப்பியனார் யாண்டும் கூறிற்றிலர்; பிற்காலத்தாசிரியரும் கூறிற்றிலர். உரைகாரரும் எழுதியுள்ளார்களெனத் தெரியவில்லை. ஆசிரியர்தொல்காப்பியனார்,

'குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசிற் பெயரே'

என்றும், அமிதசாகரனார் யாப்பருங்கலத்தில்,

'நெடில் குறில் தனியாய் நின்றுமொற் றடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே'
'குறிலிணை குறினெடில் தனித்தும் ஒற் றடுத்தும்
நெறிமையி னன்காய் வருநிரை யசையே'

என்றும், காரிகையில்,

'குறிலே நெடிலே குறிலிணை ஏனைக் குறினெடிலே
நெறியே வரினும் நிறைந்தொற் றடுப்பினும் நேர்நிரை என் றறி'

என்றும், எழுத்தின்மேல் வைத்து அசைகட்கு இலக்கணங் கூறியுள்ளனரேயல்லாமல், மாத்திரைமேல் வைத்து, இத்தனை மாத்திரை

1. யாப். கலம். 2. உரை. 2. யாப். கலம். 4. உரை.

நேரசை; இத்தனை மாத்திரை நிரையசை என்று கூறிற்றிலர். யாப்பருங்கல விருத்தியில் பிறநூல்களிலிருந்து எடுத்துக் காட்டியிருக்குஞ் சூத்திரங்களிலும் எழுத்துக்களின்மேல் வைத்தே அசைகட்கு இலக்கணம் கூறப்பட்டுளது.

அசைகட்கு மாத்திரையே கொள்ளப்படுமாயின், அளபெடையில், 'விராஅய்' என்பதுபோன்ற இரண்டு அகரங்களை எழுதாமல் ஓர் ஆகாரத்தை எழுதலாம்; அவ்வாறே ஒலிக்கலாம். என்னை எனின், இரண்டு அகரங்கள் இரண்டு மாத்திரையன; ஓர் ஆகாரம் இரண்டு மாத்திரையது. ஆகலின், ஓர் ஆகாரத்தையே எழுதின் எழுதுதலும் சுருங்குமே. அவ்வாறு எழுதாமல் இரண்டு அகரங்களை எழுதுதலை நோக்கின், அசைகட்கு எழுத்துக்களே கொள்ளப்படும் என்பதும், அதனானே இரண்டு அசைகளின்பொருட்டு இரண்டு அகரங்களை எழுதுகின்றனர் என்பதும் புலனாகும். ஈண்டு, இவ்வெழுத்துக்கள் பிளவுபட்டே ஒலிக்கும்.

அன்றியும், எழுத்துவகையானன்றி மாத்திரைவகையான் அசைகொள்வதாயின், இரண்டு மாத்திரை (ஆ) நேரசையாதலேயன்றி, நிரையசையும் (அஅ) ஆகுமே. அஃது இலக்கணமாமோ? இவற்றான், மாத்திரைவகையானன்றி எழுத்துவகையானே அசைகோடல் அறியப்படும். சீர்கோடற்கும் தளைகோடற்கும் அசைகளின்மேல் வைத்து இலக்கணங் கூறப்பட்டுளது; மாத்திரையின்மேல் வைத்தன்று.

பிளவுபடாது மூன்று மாத்திரை ஒலிப்பதோரெழுத்தினை இரண்டு மாத்திரையும் ஒரு மாத்திரையுமாகப் பிரித்து, நெடில் தனித்து வந்த நேரசை; குறில் தனித்து வந்த நேரசை என அசை கொண்டு, சீரும் கோடல் அமையும் எனின், இரண்டு மாத்திரை ஒலிப்பதோரெழுத்தினை ஒருமாத்திரையும் ஒருமாத்திரையுமாகப் பிரித்து அசைகோடலும் அமையும். ஆகலின், 'நல்ல படாஅ பறை' என்னுமிடத்து அளபெடை கோடல் வேண்டுதலின்று. 'படா' என்பதிலுள்ள டகர ஆகாரத்தினை (டா) இரண்டு குறிலாகப் பிரித்து, முறையே நிரை நேர் அசைகளாக்கின், புளிமாச்சீராகும்; தளைகெடாது. டகர ஆகாரத்தை மூன்று மாத்திரைக்கு நீட்டுதல் ஏன்? உள்ள மாத்திரைகளைக்கொண்டே சீரினை அமைத்துக்கோடற்கு ஆகுமிடத்தில், புதியதோரெழுத்தினைக் கொணர்தல் வேண்டாததொன்றன்றோ?

அளபெடையில், முதலிலும் தனித்தனியே இரண்டெழுத்துக்களே; பின்னர் அலகிடுமிடத்தும் இரண்டெழுத்துக்களே; எழுதுதலும் இரண்டெழுத்துக்களே. ஆயின், ஒலிக்குமிடத்துமட்டும் தமிழில் இல்லாததோரெழுத்தே! இக்கூற்றின் அமைதி என்னே!

இதுகாறும் கூறியவற்றால், தொல்காப்பியனார் கூறியவாறு அளபெடையில் நெட்டெழுத்தும் அதற்கு ஒத்த குற்றெழுத்தும் முறையே நின்று மூன்று மாத்திரை ஒலிக்கின்றன என்பதும், அதனையே அலகிடுமிடத்து, அவை நின்றவாறே நெடிலுங் குறிலுமாக அலகிடுதலே அமைதியாயிற்று என்பதும், ஓரெழுத்தே பிளவுபடாமல் மூன்று மாத்திரை யொலிக்கும் என்பார் கூற்றுத் தமிழின் தனியியல்பிற்கும் செய்யுளிலக்கணத்திற்கும் சிறிதும் அமையாது என்பதும் தெளிவாகும்.

இனி ஒற்றளபெடையை அலகிடு முறைமை நோக்குவோம்:

'கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு'

என்னும் அடியில், 'கண்ண்' என்னுஞ் சீரை அஃது இருக்குமாற்றானே கண், ண் எனப் பிரித்து, தேமாச்சீராகக் கோடல் வேண்டும். தனிமெய் ஓரலகு பெறுமோ என்னும் ஐயத்தை நீக்குதற்கே அமிதசாகரனார்,

[1]'ஒற்று அளபாய்விடின் ஓரலகாம்'

என்று கூறினார். அவர்தாமே,

[2]'தனிநிலை ஒற்றிவை தாமல கிலவே
அளபெடை யல்லாக் காலை யான'

என்று கூறியிருத்தலின், அளபெடையல்லாதவழி,

'ஈரொற் றாயினும் மூவொற் றாயினும்
ஓரொற் றியல என்மனார் புலவர்'

என்றபடி, கார்க்கோதை, கதிர்ச்செந்நெல், கடாய்க்கன்று என்பவற்றில் இரண்டு மெய்கள் ஒருங்கு நிற்பினும் அலகுபெறா என்பதும், அளபெடையாயவழித் தனிமெய்யும் அலகுபெறும் என்பதும் அறிதல் கூடும். உரைகாரர், 'தனிநிலை யொற்றிவை தாமல கிலவே... காலையான' என்றதனால்,

'தனிநிலை யொற்றிவை தாமலகு பெறூஉம்
அளபெடை யாகிய காலை யான

என்பது பெறப்பட்டது' என்று எழுதி,

'அஃஃஃகி னஃகிய வெஃகுணர் நாவினர்'

என்பதுமுதலியன காட்டி, 'ஆய்தம் அளபெழுந்து நேரசை யாயினவாறு கண்டுகொள்க' என்றும்,

'கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு'

என்பதுமுதலியன காட்டி, 'ஒற்று அளபெழுந்து நேரசை யாயினவாறு' என்றும் எழுதியுள்ளார். இச் செய்யுட்களில் நேரசையாக் அலகு பெற்

1. யாப். காரி. ஒழிபி. 1. 2. யாப். கலம். 3.

றன இரண்டாமதாகிய ஆய்தமும் ணகர மெய்யுமே! ஆகலின், அவ்வயே அளபெடை என்னும் பெயர்க்கு உரியவாகும்.

[1] 'ஒற்றள பெடுப்பினும் அற்றென மொழிப'

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானும் இது வலியுறும்.

இனி, ஒற்றளபெடையும் அசைநிலையாகாத இடம் உண்டு என்பது இதன் மேற்சூத்திரத்தின் உம்மையாற் போதரும்.

'கண்ணன் தண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்

என்னும் அடியில், 'தண்ண்ணெனக்' என்னுஞ் சீரில், ண் என்பது அலகு பெறுததனன் அசைநிலை ஆயிற்றிலது. ஆயின், அளபெடுத்தது ஏன் எனின், 'தட்பத்துச் சிறப்பு உணர்த்தற்கு ணகரவொற்றினை அள பேற்றிச் செய்யுள் செய்தான். அன்றி, அது மா செல் சுரம் (தே மாங் கனி) என்னும் வஞ்சியுரிச்சீராவதனை ஆகற்க; பாதிரி (கூ விளம்) என்னுஞ் சீரேயாம் என வழு அமைத்தவாறு' என்று பேராசிரியர் கூறியிருக்குஞ் சமாதானம் நோக்கற்பாலது.

உயிரளபெடையில் இசை நிறைக்க வந்த குற்றெழுத்து, மேல் நின்ற நெட்டெழுத்தோடு கலவாமல், தனியே நின்றிசைத்து அலகு பெற்றாங்கு, ஒற்றளபெடையிலும் இசை நிறைக்க வந்த மெய்யெழுத்துத் தனியே நின்று அலகு பெற்றது என்றலே ஆசிரியர்தொல்காப்பியனார்க்கும் அமிதசாகரர்முதலியோர்க்குங் கருத்தாகும்.

[2] வல்லினமெய்கள் எவ்வாற்றானும் தனித்தொலிக்க வாராமையா னன்றே அவை ஆறும் அளபெடையில் வாராவாயின? (அளபெடை யில் ஒருமெய்யெழுத்தே ஒருமாத்திரை ஒலிப்பதாயின் வல்லின மெய் களையும் அவ்வாறே, 'பக்க்கென்றது' என்பதுபோல ஒற்றி ஒலித்தல் கூடுமே). ரழமெய்களை ஒலிக்கும்பொழுது அண்ணத்தை நுனிநாக்கு வருடுகையில் ஒலி வெளியே வருதல் தடைப்படுதலின், அவை யிரண்டும் தனியே ஒலிக்க வாராமையான், அவற்றையும் அளபெடையிற் கொண் டிலர். இவற்றால் ஒற்றளபெடையில் தோன்றும் மெய்கள் ஓராற்றான் தனியே ஒலித்தற்கு உரியனவாதல் போதரும்.

இனி, 'அலகு' என்பது—ஒன்றில் தனித்தனியே பிரிந்திருக்கும் பகுதியை உணர்த்துவதாகலின், 'அலகு பெறும்' என்றலும், 'பெறாது' என்றலும் இசை குன்றிய மொழிகளில் தோன்றிய எழுத்தினைக் குறித் ததேயாகும்.

1. தொல். செய். 18

2. இதனைப்பற்றி 'எழுத்ததிகார ஆராய்ச்சி'யில் விரிவாக எழுதியுள் ளேன்; 'இளைஞர் தமிழிலக்கணம்' 'VI-ஆம் பாரப் பகுதியின் முதற்கண் சுருக்கமாக எழுதியிருக்கின்றேன். ஆண்டுக் காணலாகும்.

இவற்றானும் ஒற்றளபெடையில் தோன்றும் மெய் தனியே ஒலிப்ப தாதல் அறியப்படும்.

இதுகாறும் கூறியவற்றான், ஒற்றளபெடையில் தோன்றிய மெய் தனியே அலகு பெறுதல் பெறப்பட்டதனால், அது தனியே நின்று ஒலிப்பதாதல் தேற்றமுறும். ஆகலின், மெய்யெழுத்தொன்றே ஒரு மாத்திரை ஒலிக்கின்றது என்றும், ஆயினும் அது குறிலாகக் கொண்டு மேல்நின்ற எழுத்தோடுகூட்டி ஓரசையாகக் கொள்ளாமல் தனியே குற்றெழுத்துப்போல அசைகொள்ளப்படும் என்றும் உரைகாரர் கூறியிருப்பது நூலாசிரியர்தங் கொள்கைக்கு மாறுதலோடு, தமிழியல் பிற்கும் இயைபின்றாதல் அறியப்படும்.

## அளபெடைமொழியில் எழுத்து எண்ணும் முறை

இனி, அளபெடைமொழியில் எழுத்துக்களை எண்ணும் முறையை நோக்குவோம் : பேராசிரியர்,

[1] 'ஆஅழி என்பது மூவெழுத்துப் பாதிரியாம்.
வடாஅ என மூவெழுத்துப் புளிமாவாம்.
படாஅகை என நாலெழுத்துக் கணவிரியாம்.
ஆஅங்கு என ஈரெழுத்துப் போரேறும்.
ஆஅவது என மூவெழுத்துப் பூமருது'

என்று எழுதியிருக்கின்றார். நச்சினார்க்கினியர் பேராசிரியரைப் பின் பற்றி, [2] 'ஆஅழி என்பது மூவெழுத்துப் பாதிரி..........படாஅகை என நாலெழுத்துக் கணவிரியாம். ஆஅங்கு என ஈரெழுத்துப் போரேறும். ஆஅவது என மூவெழுத்துப் பூமருது' என்று எழுதியுள்ளார். இவ் வளபெடைச்சொற்களில் நெட்டெழுத்தினையும் குற்றெழுத்தினையும் வேறுவேறாக எண்ணிக் கணக்கிட்டிருப்பது காண்க. 'உயிரிலெழுத்தும் எண்ணப் படாஅ' என்பதனால், செய்யுட்களில் மெய்யெழுத்தினையும் குற்றியலுகரத்தையும் எண்ணுதல் இல்லையாகலின், ஆஅங்கு என்பதில், ஙகரமெய்யும் குற்றுகரமாகிய குகரமும் நீக்கி ஆஅ என்னும் இரண்டுமே எழுத்துக்களாக எண்ணப்பட்டன. அதனால் அஃது ஈரெழுத்துமொழி ஆயிற்று. அவ்வாறே ஆஅவது என்பதில் குற்றுகரமாகிய 'து' எண்ணப்படாததனால் அது மூவெழுத்துமொழி ஆயிற்று. இவ் விருவர்கூற்றுக்களான் அளபெடைமொழியில் நெடிலும் குறிலும் தனித்தனி எழுத்தாகக் கொள்ளப்படும் என்பது நன்கு விளங்கும். இதனால், [3]அளபெடையில் மூன்று மாத்திரை ஒலிப்பது ஓரெழுத்தாகவே எண்ணப்படும் என்பார்கூற்று அமையாமை தானே போதரும்.

1. தொல். செய். 17 உரை. 2. தொல். செய். 17 உரை.
3. தமிழ்ப்பொழில். 14. பக். 27, 8.

முடிபுரை

இதுகாறும் கூறியவற்றான், அளபெடையின் திறத்தில் ஆசிரியர் தொல்காப்பியனார்கூற்றே தமிழிலக்கிய நெறிக்கு இயைந்ததென்பதும், நன்னூலார் கூறுவது வடமொழிவழக்கு மேற்கொண்டதாகலின் தமிழ்முறைக்கு அமைவுடையதன்று என்பதும், இளம்பூரணர் நச்சினார்க்கினியர் இவர்தம் உரைகள் ஆசிரியர்கருத்திற்கு ஒத்தனவல்லவென்பதும், தொல்காப்பியர்கொள்கையும் நன்னூலார்கொள்கையும் ஒன்றே என்பார் கூற்றும் தொல்காப்பியத்தை நோக்காது நன்னூலை மேற்கொண்டு கூறுவார்கூற்றும் அமைபவல்ல என்பதும், அளபெழுந்த எழுத்தின ஒலி முன்னைய எழுத்தின் ஒலியோடு கலத்தலின்றித் தனியே ஒலிக்கும் என்பதும், அவ்வாறே அலகிடப்பட்டு எண்ணவும் படுகின்றது என்பதும், பிறவும் தெளிவாகும்.

---

# I ‘இன்னான் ஏது ஈங்கு’

ஆசிரியர் தொல்காப்பியனார், சொல்லதிகாரத்தில் வேற்றுமையியற்கண் 10-ஆம் சூத்திரமுதல் 21-ஆம் சூத்திரம்முடிய 12 சூத்திரங்களில், இரண்டாம் வேற்றுமைமுதல் ஏழாம் வேற்றுமைவரை ஆறு வேற்றுமைகளைக் குறித்துக் கூறியுள்ளார். அவ்வாறு கூறுமிடத்து, ஒவ்வொரு வேற்றுமையின் உருபினையும், அதன் முக்கியமான பொருளையும் முதற் சூத்திரத்திலும், அப்பொருளின் வகையினை [1]இரண்டாஞ் சூத்திரத்திலும் உரைத்திருக்கின்றார். அம்முறையில், மூன்றாம் வேற்றுமையின் உருபினையும் அதன் முக்கியமான பொருளினையும்

‘மூன்றாகுவதே
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே’

என்னும் முதற் சூத்திரத்திற் கூறி, பொருளின் வகையினை,

‘அதனின் இயறல் அதன்பால என்மனார்’

என்னும் இரண்டாஞ் சூத்திரத்தில் விளக்கினார். அச்சூத்திரத்தில்,

‘இன்னான் ஏது ஈங்கென வரூஉம்’

என்னும் அடியின் பொருளில், உரையாசிரியர் மாறுபடுகின்றனர். ஆகலின், அதனை ஈண்டு நோக்குதும்:

இளம்பூரண அடிகள், ‘இன்னான் என்பதூஉம் [2]ஏதுவினகணானும் வரும் மூன்றாம் வேற்றுமை’ என்று பொருள் கூறி,

‘இன்னான் என்பது—கண்ணான் கொத்தை, காலான் முடவன் என்பன. ஏது என்பது—முயற்சியாற் பிறத்தலான் சொல்லு நிலையாது என்பது’

என்று உதாரணங் காட்டினார்.

சேனாவரையர், ‘இன்னான் ஏது என்பது—முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாது என்பது. “அதனின் ஆதல்” எனக் காரகவேது முற் கூறப்பட்டமையான் இது ஞாபகவேதுவாம். இப்பொருள் ஆனுருபிற்கும், இன்னுருபிற்கும் ஒக்கும் என்பது விளக்கிய, “ஏது” என்னாது, “இன்னான் ஏது” என்றார். “இன்னான்” என்பது உம்மைத்தொகை. அவற்றது ஏதுப்பொருண்மை என்றவாறு’ என்று உரைத்தார்.

ஆசிரியர் நச்சினார்க்கினியர், சேனாவரையருரையைப் பின்பற்றி, ‘இன்னான் ஏது—இன்னும் ஆனும் ஆகிய ஏதுப்பொருண்மை’ என்று பொருள் கூறி, ‘முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாது. இதனுள், முயற்சியின் என்பது காரகவேது; பிறத்தலான் ஒலி நிலையாது என்பது ஞாபகவேது’ என்று உதாரணங் கொடுத்து விளக்கினார்.

கல்லாடர், ‘இத்தன்மையான் என்னும் பொருண்மை, ஏதுப் பொருண்மை’ என்று பொருள் கூறி,

---

1. சிறுபான்மையாய் வரும் பொருளும் கூறப்பட்டுள்ளது.

2. ‘ஏதுவினைக்கணனும்’ என்று பதிப்பித்திருப்பது தவறு என்பது சொல்லதிகாரக் குறிப்பினுல் அறியலாகும்.

'இன்னான் என்பது—இத்தன்மையான் என ஒருவன்பெற்றி கூறல்.
அது கண்ணாற் கொத்தை, காலான் முடவன் என்பன
ஏது—முயற்சியிற் பிறத்தலான் இசை நிலையாது என்பது'

என்று உதாரணங் கொடுத்து, 'முன்னும் ஏதுவின் பாகுபாடு ஓதி வைத்துப் பின்னும் "ஏது" என ஓதியது அவ்வாறொழிய வருவனவற்றைக் கருதிப்போலும். அவ்வேது—காரகவேதுவும் ஞாபகவேதுவும் என இருவகைத்து. முயற்சியிற் பிறத்தல் காரகம்; பிறத்தலான் இசை நிலையாது என்பது ஞாபகம். அஞ்ஞாபகத்தைப்போலும் ஈண்டு ஏது என ஓதியது' என்று விளக்கமும் எழுதினார்.

தெய்வச் சிலையார், 'இன் என்பது—இன் என்னுஞ் சொல். ஆன் என்பது ஆன் என்னுஞ் சொல். ஏது என்பது ஏது என்னுஞ் சொல்' என்று பொருள் கூறி, 'புகை உண்மையின் நெருப்புண்மை அறிக; புகை உண்மையான் நெருப்புண்மை அறிக; புகை ஏதுவாக நெருப்புண்மை அறிக' என்று உதாரணங் கொடுத்தார். இன்னும் அவர், 'அன்ன பிறவாவன—காரணம், நிமித்தம், துணை, மாறு என்பன' என்று கூறி, அவற்றிற்கும் உதாரணம் கொடுத்துள்ளார். நிற்க,

'இன்னானேது ஈங்கென வரூஉம்'

என்னும் அடியில், ஈங்கு என்பதனைக்குறித்து, [1]உரையாசிரியரும், கல்லாடரும் தெய்வச்சிலையாரும் ஒன்றுமே கூறிற்றிலர். சேனாவரையர், 'என என்பதனை மாற்றி ஏது என்பதன்பின் கொடுத்து, "ஈங்கு வரூஉம் அன்ன பிறவும்" என இயைக்க' என்றார். நச்சினார்க்கினியர், 'என வரூஉம்; ஈங்கு வரூஉம் அன்ன பிறவும்' என்று, 'வரூஉம்' என்பதனை இரண்டிடத்துக் கூட்டிப் பொருளுரைத்தார். அவர், 'ஈங்கு' என்பதற்கு, 'வினைமுதலும் கருவியும் ஆகிய பொருளிடத்து' என்று எழுதியுள்ளார்.

ஆசிரியர், 'அதனி னியறல்' என்னுஞ் சூத்திரத்தில் மூன்றாம் வேற்றுமைப் பொருளின் வகையினைக் கூறுகின்றாராகலின், அதிற் கூறியனவெல்லாம் அவ்வேற்றுமையின் பொருள்வேறுபாடே யாகும். ஆகலின், சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'இன்னான்' என்பதை இன், ஆன் என்று பிரித்து உருபாகக் கொண்டதூஉம், தெய்வச்சிலையார் இன், ஆன், ஏது என்னுஞ் சொற்களே உருபும் என்றதூஉம் அமைவன வல்ல என்பது எளிதிற் புலனாகும்.

இனி 'இன்னான் ஏது ஈங்கென வரூஉம்' என்னும் அடியின் அமைவுடைப்பொருள் யாது என்று நோக்குதும்:

மூன்றாம் வேற்றுமைச் சூத்திரத்தில்,

'வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே'

என்று கூறப்பட்டுள்ள வினைமுதல் கருவிப்பொருள்களே,

'கர்த்ரு கரணயோ: த்ருதீயா' (2. 3 : 18)

என்னும் பாணினீய சூத்திரத்திலும் கூறப்பட்டுள்ளன.

---

1. 'இன்னான் ஏது' என்பவற்றிற்கு அமைவுடைய பொருள் கூறியவர் 'ஈங்கு' அல்லது 'ஈங்கனம்' என்பதற்கும் பொருள் கூறாது விடுவாரல்லர் எனவும் அது விடுபட்டிருத்தல் வேண்டும் எனவும் ஐயம் உண்டாகின்றது.

அச்சூத்திரத்திரத்தை யடுத்து,

[1] 'ஸஹயுக்தே அபரதானே' (2.3 : 19)

என்னுஞ் சூத்திரமும்,

அதனையடுத்து,

'யேநாங்க விகார:' (2. 3 : 20)

'இத்தம் பூதலக்ஷணே' (2. 3 : 21)

என்னுஞ் சூத்திரங்களும், பின்னர்,

'ஹேதௌ' (2. 3 : 23)

என்னுஞ் சூத்திரமும் உள்ளன. இவற்றுள், 'யேநாங்க விகார:' என்பது முதலிய மூன்று சூத்திரங்களின் பொருளும்

'இன்னான் ஏது ஈங்கு'

என்பவற்றின் பொருளும் தம்முள் ஒத்தன வாகும்.

இன்னான் என்பது—இன்னவன் என்பதாம். அஃதாவது, நெடு மூக்கன், குழிக்கண்ணன் என்பன போல உறுப்புக்களைப் பற்றி வருவது. இது வழக்கினுள்ளும் பெரும்பாலும் அறியலாகும். அதனானே, இளம் பூரண அடிகள்,

'இன்னான் என்பது—கண்ணாற் கொத்தை, காலான் முடவன் என்பன' என்றெழுதினர். 'யேநாங்க விகார:' என்னுஞ் சூத்திரத்திற்கும் இப்பொருள் பயக்கின்றது—

'அக்ஷ்ணா காண:' (கண்ணாற் குருடன)

என்பதனையே வடமொழியில் உதாரணமாகக் காட்டியிருத்தல் அறியத் தக்கது. இதனால், 'யேநாங்க விகார:' என்னுஞ் சூத்திரத்தின் பொருளும் 'இன்னான்' என்பதனாற் குறித்த பொருளும் ஒன்றே என்பது போதரும்.

'ஏது' என்பதும்,

'ஹேதௌ'

என்னுஞ் சூத்திரத்தின் பொருளும் ஒன்றேயாதல் கூறாமலே விளங்கும். ஏதுவிற்கும் காரணத்திற்கும் (கருவிக்கும்) உள்ள [2] வேறுபாடு அறியத் தக்கது.

இனி, 'ஈங்கு' என்பதனை நோக்குதும்: 'ஈங்கு' என்பதற்கு 'ஈங்கனம்' என்னும் பாடம் உண்டென்பது [3] சேனாவரையத்தால் அறியப்படுகின்றது. அதுவே பழைய பாடமா யிருக்கலாம் எனத் தோன்றுகின்றது. ஈங்கனம் என்பது இத்தன்மை, இப்படி என்னும் பொருளது. இனி, 'ஈங்கு' என்பதற்கும் இப்பொருள் உளது.

'முழவுத்தோளான் முறுவலித் தீங்கே இருநீயென்று' (சீவக. 1593)

---

1. இச்சூத்திரப் பொருளோடு தொடர்புடையது 'ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே' (வேற். மயங்.) என்பது.

2. ஒரு தொழிலை நிறைவேற்றுதற்கு நேரே சாதகமா யிருப்பது காரணம்; பிறகாரணமெல்லாம் ஏது. ஏது—பொருள் குணம் தொழில் இம் மூன்றற்கும் காரணமாகும்.

3. 'ஈஙஙனம்(ஈங்கனம்) என்று பாடம் ஓதுவாரும் உளர்' என்பது சேனாவரையம்

என்னும் அடியில், 'ஈங்கே' என்பதற்கு 'இப்படியே' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் பொருள் கூறியிருக்கின்றார். [1]நற்றிணையிலும் ஈங்கு என்பது இப்படி என்னும் பொருளில் வந்துளது. ஆங்கு என்னுஞ் சொல் அத்தன்மை, அப்படி என்னும் பொருளிலும், யாங்கு என்பது எப்படி, எத்தன்மை என்னும் பொருளிலும் பயின்றுவருதல் ஈண்டைக்குக் கருதத்தகும்.

இவற்றால், 'ஈங்கு' (ஈங்கனம்) என்பது,

'இத்தம் பூதலக்ஷணே'

என்னுஞ் சூத்திரத்தின் பொருளோடொத்ததாகும் எனத் தோன்றுகின்றது. 'இத்தம்' என்பது 'இப்பிரகாரம், இப்படி' என்னும் பொருளது; 'பூத' என்பது 'அடைந்தது' என்பதாகும்.

'ஜடைகளால் தாபஸன்'

என்பது இச் சூத்திரத்திற்குக் காட்டப்பட்டுள்ள உதாரணம். இது போல்வதே 'ஈங்கு' (ஈங்கனம்) என்பதற்கு உதாரணமாகும். 'இன்னன்' என்பதற்கு இத்தன்மையான் என்று கல்லாடர் கூறியது ஈண்டைக்கு அமைதல் இன்று.

ஆசிரியர், 'ஈங்கென வருஉம்' என்னுந் தொடரில், 'என' என்னுஞ் சொல்லை 'ஈங்கு' என்பதனைப் பின்னர் வைத்திருத்தலின், 'ஈங்கு' என்பது மூன்றாம் வேற்றுமைப் பொருள் தருஞ் சொல் ஒன்றேயாகும். ஆகலின், சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'என' என்பதனை மாற்றிப் பொருள் கூறியது அமையாமை எளிதின் அறியப்படும். 'இன்னன் ஏது ஈங்கு' என்பவை ஒருங்கு கூறப்பட்டிருத்தலும், 'யேநாங்கவிகார:' என்னுந் தொடக்கத்துச் சூத்திரங்கள் ஒருங்கே அமைந்திருத்தலும் உளங்கொளற்பாலன.

'இன்னன்' என்பதற்கு இளம்பூரண அடிகள் காட்டிய உதாரணம் பொருந்தாதென்று, வடநூற்புலமை வாய்ந்த சேனாவரையர் மறுத்துக்கூறியது வியப்பினைத் தருகின்றது. சொல்லதிகாரக் குறிப்பின் ஆசிரியர் டாக்டர் ஸ்ரீ சுப்ரமணிய சாஸ்திரியாரவர்கள், '"அன்ன பிறவும்" என்பதனால், "கண்ணாற் கொத்தை" முதலியவற்றை அடக்கிய சேனாவரையர், சூத்திரத்தினுள் "இன்னன்" என்பதற்கு அவற்றை உதாரணமாகக் காட்டிய உரையாசிரியர்கொள்கையை மறுத்தது பொருந்துமா' என்று எழுதியிருப்பது ஈண்டு அறியத்தக்கது.

'இன்னனேது ஈங்கென வருஉம்' என்னும் அடியில், 'இன்னன் ஏது' என்பவற்றோடு ஒருங்கு கூறப்பட்டிருத்தலின், 'ஈங்கு' என்பது மூன்றாம்வேற்றுமைப் பொருளதே யாதல்வேண்டும் என்பதூஉம், உரையாசிரியரும் கல்லாடரும் தெய்வச்சிலையாரும் அதனைப்பற்றி ஒன்றுமே கூறாது விடுத்ததும் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் அதற்கு மூன்றாம்வேற்றுமைக்குரிய பொருள் கூறாது மாற்றிக்கூட்டியுரைத்ததும் அமைவல்ல என்பதூஉம், அஃது 'இத்தம் பூதலக்ஷணே' என்னுஞ் சூத்திரத்தின் பொருளோடொத்ததாகக் காண்கின்றது என்பதூஉம் அடியேன்கருத்து. அறிஞர் ஆராய்வாராக.

1. 'பேதை நெஞ்சங் கவலை கவற்ற, ஈங்கா கின்றால்.' நற். 144.

# II தமிழிலக்கணமும் ஏனைத் திராவிட மொழிகளும்

நமது நோக்கிற்கு வந்த திராவிட மொழிகள் பலவற்றுள்ளும் தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம் இந் நான்கு மொழிகளே இலக்கிய இலக்கண வளம் பெற்றுள்ளவை. இவற்றுள் தமிழ்மொழியே மிக்க தொன்மைவாய்ந்த இலக்கிய இலக்கணம் உடையது. தமிழி லுள்ள நூல்களெல்லாவற்றுள்ளும் தொல்காப்பியமே முற்பட்டது என்பது அறிஞர் பலரொப்ப முடிந்தது.

தொல்காப்பியத்திற் கூறப்பட்டுள்ள இலக்கணங்களெல்லாம் மிக்க பழமைய. அவற்றுட் சில, சங்கச்செய்யுட்களிலும் அமைந்திருக்க வில்லை. அவற்றிற்கு மாறானவை பலபல, பிற்காலத்துச் செய்யுட் களிற் காணுகின்றன. ஆயின், தொல்காப்பியங் கூறும் இலக்கண வழக் குகள் பலவும் சங்கச்செய்யுட்களிற் காணும் அமைதிகள் (பிற்காலத் துச் செய்யுட்களிற் காணப்படாதவை) சிலவும் கன்னடம், தெலுங்கு, மலையாளம் இம் மொழிகளிற் காணாநின்றன. அவற்றுள்ளும் கன்னட மொழியிலேதான் தமிழ்வழக்குகள் பலப்பல உள்ளன.

தமிழிற் சுருக்கக் கூறியிருப்பவை கன்னடத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. உதாரணமாக—உடம்படு மெய்யின் இலக்கணம் தொல்காப்பியத்திலும் நன்னூலிலும் ஒவ்வொரு சூத்திரத்திற் கூறப் பட்டுள்ளது. கன்னடத்தில் இவ்விவ் வீறுகளுக்குமுன் இன்ன உடம் படுமெய் வரும் என்பது [1]மூன்று சூத்திரத்திலும், இவ்விவ் விடங் களில் உடம்படுமெய் வாராது என்பது [2]மூன்று சூத்திரத்திலும் கூறப்பட்டுள்ளன. இவைபோன்ற இலக்கண வொப்புமைகளை இக் கட்டுரையில் எழுதுகின்றிலேன்; தொல்காப்பியத்திலும் பண்டைச் செய்யுட்களிலும் காணும் இலக்கண வழக்குக்களுள் பிற்காலச் செய்யுட்களில் அருகியவையும் வழக்கிழந்தனவுமான வழக்குக்கள்— கன்னடம், தெலுங்கு, மலையாள மொழிகளில் நிலைபேறுடை யவை—சிலவற்றைமட்டும் ஈண்டு எழுதுகின்றேன். இவற்றால், தமிழ் மொழிக்கும், கன்னடம் முதலிய மொழிகட்கும் உள்ள ஒற்றுமை

1. ஶப்தமணி தர்ப்பணம். சூ. 63—65.
2. ,, ,, 66—68.

அறியப்படுதலேயன்றி, பழைய வழக்குக்களைக் கன்னடம் முதலிய மொழிகள் விடாமல் மேற்கொண்டுள்ள ஊற்றமும் அறியப்படும்.

**1. முன்னிலை யொருமைப்பெயர் :**

நீ என்னும் முன்னிலை யொருமைப்பெயர் இரண்டாம் வேற்றுமை முதலியவற்றின் உருபுகளை ஏற்குமிடத்து நின் என்றாகும் என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியுள்ளார். அவ்விதிப்படி, நின்னை நின்னொடு நினக்கு நின்னின் நினது நின்கண் என்று வரும். இவ்வாறே பண்டைச் செய்யுட்களில் வந்துள்ளது. ஆயின், பிற்காலத்தில், நின் என்பது நுன் எனத் திரிந்து, வேற்றுமையுருபேற்றவழி நுன்னை நுனனொடு நுனக்கு முதலிய வடிவில் வழங்கியது. அதுவும் பின்னர், உன் எனத் திரிந்து, உன்னை உன்னொடு உனக்கு என்னுமாறு தொடக்கத்ததாய் வழங்குவதாயிற்று. இதுவே இக்காலத்தில் வழங்குகின்றது. நீ என்னும் பெயர்க்கும், உன் என்னும் வடிவிற்கும் யாதொரு தொடர்பும் இல்லையன்றோ?

தமிழில் இவ்வாறு திரிந்துபோயினும் மலையாளத்தில் நின்னெ, நின்னொடு, நினக்கு, நின்னினின்று, நின்னெக்காள், நின்றெ (நின்னுடெ), நின்கல் (நின்கண்) என நின் என்னும் வடிவமே இன்றும் இருவழக்கிலும் வழங்குகின்றது. புதுக்கன்னடத்திலும் நின்னன்னு, நின்னிந்த, நினகெ, நின்னதெஸெயிந்த, நின்ன, நின்னல்லி என்று நின் என்னும் வடிவமே உண்டு. தெலுங்கில் இரண்டாம் வேற்றுமையில் நின் என்பதும், மற்ற வேற்றுமைகளில் நீ என்பதும் உள. இலக்கியவளம் இல்லாத மொழிகளாகிய துளு, துத, கோத, குயி, ஒரான், ராஜ்மஹால் மொழிகளிலும் நின் என்னும் வடிவம் நிலைபெற்றிருக்கின்றது.

**2. சாரியை - அத்து :**

நிலா, மழை, வெயில், இருள் இச் சொற்களுக்கு அத்துச் சாரியை வரும் என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியுள்ளார்[1]. ஆயின், இச் சொற்கள் அத்துச் சாரியை பெற்றுவருதல் காணப்படவில்லை. (இவற்றுட் சில[2] ஒரோவழி அத்துச் சாரியை பெற்று வந்திருக்கலாம்.) ஆயின், மலையாளத்தில், நிலா மழை வெயில் என்னுஞ் சொற்கள் அத்துச் சாரியை பெற்றே வருகின்றன. இருள் என்னும் பொருளில் இருட்டு என்னுஞ் சொல் வழங்குதலின் அச்சொல் அத்துச் சாரியை பெற்று வருகின்றது. ஆகவே, நிலா முதலிய நான்கு சொற்களும் அத்துச் சாரியை பெற்று வருதல் அறியலாகும்.

1. எழுத்ததி. 228, 287, 377, 402.
2. 'இருளத் ததுவென் இதுவென் னென்னோ' பெரிய திருமொழி. 10. 8 : 3.

ஸாதி குளிர்நிலாவந்துநேமே மெத்தமேல்

என்னுமிடத்து, நிலா என்னுஞ் சொல் அத்துச்சாரியை பெற்றுளது காண்க. இவ்வாறு வருதலை நோக்கி,

[2] 'இருட்டத்து நிலாவத்தென
னிதயாதிக கதது தனனெடோ.

என்று, இக்காலத்தில் ஸ்ரீ ராஜராஜ வர்ம கோயிற்றம்பிரானவர்கள் இலக்கணம் வகுத்துள்ளார். அன்றியும் அவர்,

[3] 'அதது வேநிலுமே சேரும்
கால தேஸ விவக்ஷயில்'

என்று சூத்திரம் செய்து,

(காற்றத்து—காற்றுள்ள இடத்து அல்லது காற்றுள்ள காலத்து)
மழயத்து—மழையுள்ள இடத்து அல்லது மழையுள்ள காலத்து

என்று உதாரணமும் காட்டியுள்ளார். வெயிலத்து, மழயத்து என்பது அம்மொழியில் சாதாரண வழக்கு.

3. உள் (உருபு):

உள் என்னும் ஏழனுருபு ஒரு பொருளை ஒரு குழுவினின்று பிரித்து உறுதிப்படுத்தும் பொருளில (நிர்த்தாரணார்த்தத்தில்), தமிழ் இலக்கணத்திலும் இலக்கியத்திலும் பண்டு வழங்கப்பட்டுளது. பிற்காலத்தில் அவ்வழக்குக் கெட்டது. இக்காலத்தில் அதனை நோக்கும் எண்ணமே இல்லாதொழிந்தது. அதனால், 'அவருள் இவன் நல்லவன்' என்று எழுதவேண்டியதனை, 'அவரில் இவன் நல்லவன்' என்று எழுதிவிடுகின்றனர். 'அவரில் இவன் நல்லவன்' என்பது 'அவரைக்காட்டிலும் இவன் நல்லவன்' என்னும் பொருளைத் தருதலேயன்றி, 'அவருள் இவனே நல்லவன்' என்னும் பொருளைத் தாராதன்றோ?

தெலுங்கு கன்னடங்களில் நிர்த்தாரணார்த்தத்தில் உள் என்பதுவே வருகின்றது. உள் என்பது தெலுங்கில் 'லோன்', 'லோபல' என்று வழங்கும்; கன்னடத்தில் "ஒள்' என்று வழங்குகின்றது.

[4] 'லோபல நிர்த்தாரணைதபவா ஷஷ்டிம'

'நிர்த்தாரணார்த்தத்திற் பிறந்த ஷஷ்டிக்கு லோபல என்பது வரும்' என்பது தெலுங்கு இலக்கணம்.

[5] 'ஆதாரம ததிகரண மல்லி ஸபதமி திளி நிர்த
தாரண......அர்த்தகதம'.

என்பது கன்னட இலக்கணம். 'ஆதாரமாயிருப்பது அதிகரணம் எனப்படும். அங்கு ஏழனுருபு வரும். தெளி; அது நிர்த்தாரணம்...... பொருள்களை உடையது' என்பது இதன் பொருள்.

இவ்விலக்கணம் மாறாது இவ் விருமொழியிலும் இன்றும் நிலைத்துளது. வழக்கிலும் அவ்வாறே வழங்குகின்றது.

---

1. சந்தரோத்ஸவம். 1 : 62.
2. கேரளபாணினீயம். சூ. 68.
3. சூ. 67.
4. ஆந்த்ர ஸப்த சிந்தாமணி. 3 : 31.
5. ஸப்தமணி தாப்பணம். 195.

### 4. தருதல், வருதல் என்னுஞ் சொற்கள் :

ஆசிரியர் தொல்காப்பியனார், தருதல் வருதல் கொடுத்தல் செல்லுதல் என்னும் நான்கு சொற்களும் மூன்றிடங்கட்கும் வரும் என்று முதலிற் கூறி, பின்னர்,

[1] 'தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயி ரிடத்த'

[2] 'ஏனை இரண்டும் ஏனை இடத்த'

என்று வகுத்துக் கூறியுள்ளார். அவர் கூறிய இலக்கணம் பண்டைச் செய்யுட்களிலேயே பிறழ்வதாயிற்று. இக்காலத்தில் அந்நியதி அறவே யொழிந்தது. ஆயின், மலையாள மொழியில், கல்லாதவர் இளஞ்சிறுவர் முதலியோரும், 'தரு' என்னுஞ் சொல்லைப் படர்க்கையிலும், 'கொடு' என்னுஞ் சொல்லைத் தன்மை முன்னிலைகளிலும் வழங்குதல் இலர். செய்யுட்களிலும் யான் அறிந்தவரை பிறழ்ந்து வந்திருப்பதாகத் தெரியவில்லை.

### 5. தன்மை, முன்னிலைப் பெயர்களோடு விகுதி சேர்ந்து வருதல் :

படர்க்கைப் பெயரைத் தன்மை முன்னிலைகளில் வழங்கும்போது அப்பெயரோடு தன்மை முன்னிலையைக் குறிக்குஞ் சொல்லைச் சேர்த்து வழங்கும் வழக்குப் பண்டைச் செய்யுட்களில் உளது. அஃதாவது, அடியன் என்னும் படர்க்கைப் பெயரைத் தன்மைக்கண் வழங்கும்போது, அதனோடு, தன்மையைக் குறிக்கும் என் என்பதனைச் சேர்த்து அடியனேன் என்று வழங்குதல்போல்வது.

[3] 'யாமவன் கிளைஞரேம்'

[4] 'வான வரம்பனை நீயோ பெரும'

[5] 'யாரை யோநீ'

[6] 'சுரத்திடை யிருந்தனிர் யாரீர்'

என்று பண்டைச் செய்யுட்களில் வந்திருப்பன காண்க. தன்மை யொருமையைக் குறிக்க 'ஏன்' என்பதனையும், தன்மைப் பன்மையைக் குறிக்க 'ஓம்' என்பதனையும் சேர்த்து வழங்கும் வழக்குச் சாசனங்களில் யாண்டுங் காணலாகும். இவ்வழக்குப் பிற்காலத்தில் அருகியது. முன்னிலையைக் குறிக்க ஐ, இர், ஈர் என்பன சேர்த்து வழங்கும் வழக்கும் ஒழிந்தது. ஆயின், இதுபோன்ற வழக்குத் தெலுங்கில் நிலைபெற்றுளது. இதுபற்றிய இலக்கணம் [7]ஆந்த்ர ஶப்த சிந்தாமணியில் நான்கு சூத்திரங்களிற் கூறப்பட்டுளது. அவ்விலக்கணத்திற்கு மாறாக—படர்க்கைப் பெயரை அப்படியே தன்மை முன்னிலைகளில் வழங்குதல்—இன்றளவும் இல்லை. உலக வழக்கிலும் அந்நியதி பெரும்பாலும் உளது. கன்னடமொழியில் இவ்வழக்கு உறழ்ச்சியாய் வரும் என்பது [8]ஶப்தமணி தர்ப்பணத்தினால் அறியப்படுகின்றது.

---

1. தொல். சொல். 29.
2. " 30.
3. புறம். 144.
4. " 2.
5. சிலப். 20 : 49.
6. புறம். 141.
7. ஹலந்தபரிச்சேதம். 32—5.
8. ஶப்தமணி தர்ப்பணம். 230.

## 6. எல்லாம் என்னுஞ் சொல் :

எல்லாம் என்னுஞ் சொல் அஃறிணைப் பன்மையை உணர்த்துஞ் சொல். அது, தன்னைப்பன்மைக்கண் அஃறிணையை உளப்படுத்திய வழியன்றி உயர்திணைக்கண் வருதல் இல்லை என்று ஆசிரியர் தொல்காப்பியனார்,

> [1]'தன்னுள் ளுறுத்த பன்மைக் கல்லது
> உயர்திணை மருங்கி னாக்கமு மில்லை'

என்னுஞ் சூத்திரத்திற் கூறியுள்ளார். அதன்படி 'யாமெல்லாம்' என்றல் அமையுமேயன்றி, படர்க்கைக்கண், 'அவரெல்லாம்' என்றல் அமையாது; 'அவரெல்லாரும்' என்பதே அமையும். ஆயின்,

> [2]'புலவ ரெல்லாம் நின்னோக் கினரே'

என்று பண்டைச் செய்யுளிலேயே வந்துளது.

எல்லாம் என்னுஞ் சொல் தெலுங்கில் எல்லன் என்று வழங்கும். அஃது அஃறிணைச் சொல்லொடு சேர்ந்து 'அவியெல்லன்' (அவையெல்லாம்) என்று வருமேயன்றி, உயர்திணைச் சொல்லொடு சேர்ந்து, 'வாரெல்லன்' (அவரெல்லாம்) என்று வருதலில்லை. இக்காலத்து வழக்கிலும் அவ்வாறே உளது.

எல்லாம் என்பது கன்னடத்தில் எல்லவு என்று வழங்கும். அஃது அஃறிணைப் பெயர்களோடுதான் சேர்ந்துவரும். உயர்திணைப் பெயரோடு 'எல்லரு' என்பதுவே சேர்ந்துவரும். 'அவரெல்லரு பந்தரு' (அவரெல்லாரும் வந்தனர்) என்று வருதலேயன்றி, 'அவரெல்லவு பந்தரு' (அவரெல்லாம் வந்தனர்) என்று வருதலில்லை.

## 7. உயர்திணைப் பெயருக்கு வரும் அடைமொழி :

உயர்திணைப் பெயர்க்கு அடையாக வரும் எண்கள் எண்ணியற் பெயராய் வருதலே பழைய வழக்கு; அஃதாவது—அரசர் என்னுஞ் சொற்கு அடையாக மூன்று என்னும் எண் வரல்வேண்டுமாயின், அது மூவர் என்றே வரும் என்பதாம். 'மூவரரசர்' என்று வருமேயன்றி, 'மூன்று அரசர்' என்று வாராது. 'பெருந்தேவி பொறை உயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்கள் உளர்' என்னும் உதாரணம் அமைவுடையது. இம் முறைமையை உட்கொண்டே, பல் சான்றோர் பல்லரசர் என்புழி, நிலைமொழியீற்று ரகரமெய்யும் அதன் மேனின்ற அகரமும் கெட்டன என்று [3]ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதியுள்ளார். ஆயின், இவ்வமைதி பிற்காலத்தில் அருகுவதாயிற்று; இக்காலத்தில் பெரும்

---

1. தொல். சொல். பெய 33.
2. புறம். 42.
3. எழுத்ததி. 153 உரை.

புலவர் நூல்களிலும் காண்பது அரிதாயுளது. தெலுங்கிலும், கன்னடத்திலும் இந் நியதி நிலைபெற்றுளது. தெலுங்கில், 'இத்தரு மனுஷ்யுலு வச்சிரி' (இருவர் மனிதர் வந்தனர்) என்று வழங்குதலேயன்றி, 'ரெண்டு மனுஷ்யுலு வச்சிரி' என்று வழக்கிலும் வழங்குதல் இல்லை. அவ்வாறே கன்னடத்திலும் 'இப்பரு மனுஷ்யரு பந்தரு' என்றே வழங்குகின்றது. 'எரடு மனுஷ்யரு பந்தரு' என்று வருதல் இல்லை.

இக் கட்டுரையினால், தமிழின் பழைய வழக்குகளுட் பல, தமிழிற் போல அழிந்துபோகாமல், கன்னடம் முதலிய மொழிகளில் நிலைபெற்றிருப்பன அறியலாகும். இவ்வாறு உண்மைகள் இன்னும் பல.

வே. வேங்கடராஜுலு

# 'தேவு' என்னுந் தமிழ்ச்சொல்

By

V. Venkata Rajulu Reddiar,

*Junior Lecturer in Tamil.*

மதுரைக்காஞ்சியில்,

> '[1]நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர்
> பாடுசிலம்பு மிசை'

என்று பதிப்பித்திருக்கும் அடிக்கு, 'நீரை இடாவான் முகந்து கொள்ளும் நிரையாக நின்று தொழில்செய்வாரிடத்தே ஒலிக்கும் ஓசை' என்னும் உரை காண்கின்றது. 'நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர்' என்னும் அடிக்கு, 'நீர்தெவு நிரைத்தொழுவர்' என்னும் பாடாந்தரம் கொடுக்கப்பட்டுளது. அன்றியும், மேலையடிகளின் உரையின் கீழ்க் குறிப்பில், 'தெவ்வு என்ற பாடமே நேரானது' என்று குறிக்கப் பட்டிருக்கின்றது. ஆயின், தொல்காப்பியப் பதிப்புக்களெல்லாவற்றிலும், 'தேவுக் கொளற்பொருட்டே' என்னும் பாடமே உளது. இளம்பூரணருரையில், 'நீர்தேவு நிரைத்தொழுவர்' என்று உதாரணங் கொடுக்கப்பட்டுளது. சேனாவரையத்தில், 'நீர்த்தேவு நிரைத்தொழுவர்' என்னும் உதாரணமும், 'தேவும் தெவ்வும் முறையானே கொள்ளுதலும் பகையும் ஆகிய குறிப்பு உணர்த்தும்' என்னும் உரையும் காண்கின்றன. நச்சினார்க்கினியருரையில், 'தேவு கொள்ளுதலாகிய குறிப்பு உணர்த்தும்' என்னும் உரையும், 'நீர்தேவு நிரைத்தொழுவர்' என்னும் உதாரணமும் காண்கின்றன. தெய்வச்சிலையாருரையில், 'தேவு என்னுஞ் சொல் கொள்ளுதல் என்பதன் பொருள் படும்' என்னும் உரையும், 'நீர்தேவு நிரைத்தொழுவர்' என்னும் உதாரணமும் உள்ளன. இப்பதிப்புக்களுளொன்றனிலாதல், 'தெவ்வுக் கொளற்பொருட்டே' என்று வகரமெய் இரட்டித்த பாடம் காண்கிலது; உதாரணத்திலும் வகரமெய் இலது.

பத்துப்பாட்டின் பதிப்புக்களில், 'நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர்' என்று வகரமெய் சேர்த்துப் பதிப்பித்திருப்பதற்கு முக்கிய காரணம் பிரயோகவிவேகமே ஆகும். அந்நூலில், 'நாநார்த்த பதத்தையெல்லாம்,

1. இடா முதலியவற்றால் நீரை இறைத்தற்பொருளில் 'தேவு' என்னுஞ் சொல் மலையாளமொழியில் வழங்குகின்றது. இப்பொருளே ஈண்டு அமைவுறுகின்றது. ஆகலின், 'கொளற்பொருட்டில் வந்ததற்கு இவ்வடி அத்துணை அமைவுடைய உதாரண மாதல் இன்று.

"வர்ணவற்பாவட என்னும் எழுத்தொப்புமையுடைய பலபொருளொரு சொல் பலசொல்லல்லது ஒருசொல் அன்று எனவும், ஒன்றல்லவை பல என்பதனுனும் பல என்பதல்லது ஒருசொல் அன்று எனவும், இரு சொல்லாதலின் இருகால் உரைக்க எனவும் வடநூலார் கூறுவர்; என்னே? "பய: க்ஷீரம் பயோம்புச" என அமரசிங்கத்துள் வருதலின் என்க.... தொல்காப்பியரும் "தெவ்வுக் கொளற்பொருட்டே", "தெவ்வுப் பகை யாகும்" எனவும் இரட்டித்துக் கூறுவர்' என்பது காண்கின்றது. இஃது அமரசிங்கன்கருத்தாயின் அமரத்துட் பலபொருள்ஒருசொற் றெகுதி (நாநார்த்த வர்க்கம்) என்ற சொல்வழக்கிற்கே இடனின்று; பல பொருளைத் தருமிடத்திற் பல சொல் ஆகுமன்றே? ஆகையால், பலபொருளொருசொல், எல்லாவற்றையும் பலகால் எடுத்துக்கூறியிருத் தல் வேண்டும். எவ்வாறெனின், அவர் காட்டிய 'பய: க்ஷீரம் பயோம் புச' என்பதுபோல. இனி, 'பய: க்ஷீரம் பயோம்புச' என்பதன் பின் னுள்ள அடியை நோக்குவோம்:

'ஓஜோ தீப்தௌ பலே ஸ்ரோத இந்த்ரியே நிம்நகாரயே' என்னும் அடியில், தீப்தி பலம் என்னும் இருபொருளையுடைய ஓஜஸ் என்னுஞ் சொல்லையும், இந்திரியம் அற்றின் ஒழுக்கு என்னும் இருபொருளையுடைய ஸ்ரோதஸ் என்னுஞ் சொல்லையும் இருகால் கூறியிருத்தல்வேண்டும். அங்கனம் கூறிற்றிலரே! இனி, நாநார்த்தவர்க்கத்தின் முதற்கண் உள்ள,

'ஆகாரோத்ரிதிவோ நாகோ லோகஸ்து புவநே ஜநே'

என்று, இரண்டு பொருளுடைய நாக என்னுஞ் சொல்லையும், லோக என் னுஞ் சொல்லையும் ஒருகாற் கூறியுள்ளாரேயன்றி இருகாற் கூறினரல்லர். யமன் முதலிய பதின்மூன்று பொருளையுடைய ஹரி என்னுஞ் சொல்லையும் ஒருகாற் கூறியதேயன்றிப் பலகாற் கூறிற்றிலர். ஆதலின், 'இரு சொல்லாதலின் இருகால் உரைக்க' என்பது வடநூலாருள் ஒரு சாரர் கொள்கையாதலேயன்றி எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததன்று என்பது நன்கறியப்படும். இதனை, [1]"அப்பதீக்ஷிதர் [2]"ஏகநாளாவலம்பி பலத்துவந்துவம்" போல என்று திருஷ்டாந்தங் கூறி, ஒருகால் உரைக் கவே பல பொருளிற் பிரவிருத்திநிமித்தம் ஒருங்கு தோன்றும் என்றுங் கூறுவர்' என்று பிரயோகவிவேக முடையார்தாமே கூறியிருப்பதனுன் அறிதல் கூடுமே. 'ஸக்ருத் உச்சரிதஸ் ஶப்த: ஸக்ருத் ஏவ அர்த்தம் கமயதி' (ஒருகால் உச்சரிக்கப்பட்ட சொல் ஓரர்த்தத்தையே தெரிவிக் கும்) என்னும் நியாயத்தை மேற்கொண்டவர்களும் சொற்சுருங்குதற் பொருட்டுப் பலபொரு ளொருசொல் ஆண்டனராயினும், பொருளுரைக் குங்கால் ஆவ்ருத்தி செய்து பல பொருள் கூறுவர்.

---

1. அப்பயதீக்ஷிதர் என்பது வழக்கு.
2. 'ஏகநாளாவலம்பி பலத்வயவத்' என்பது ஒரு நியாயம்.

இவற்றால், பல பொருளுடைய சொல்லைப் பலகாற் கூறுதல் வேண்டும் என்னும் முறைமை அமரசிங்கனுக்குக் கருத்தன்று என்பது அறியலாகும். ஆயின், பயஸ் என்ற சொல்லை இருமுறை கூறியது என்னெனின், 'விருத்தம் அமைவுறல் வேண்டி இங்ஙனம் கூறியிருத்தல் வேண்டும் என்று சொல்வது மிக்க அமைதி' என்று பாரமேஸ்வரீய வியாக்யானம் கூறுஞ் சமாதானம் உட்கொளற்பாலது.

இனி, தொல்காப்பியத்தை நோக்குவோம்: தொல்காப்பியனார் பல பொருள் தருஞ் சொற்களுள் ஒன்றனையாவது பல கால் எடுத்துக் கூறிற்றிலர்.

'பணையே பிழைத்தல் பெருப்பு மாகும்'
'படரே உள்ளல் செலவு மாகும்'
'அழுங்கல் இரக்கமும் கேடுஞ் செய்யும்'
'சேழுமை வளனும் கொழுப்பு மாகும்'
'விழுமம் சீர்த்தியும் சிறப்பு மிடும்பையும்'
'நனவே களனும் அகலமும் செய்யும்'
'மதவே மடனும் வலியு மாகும்'

என்னும் இச் சூத்திரங்களிற் கூறப்பட்ட பணை முதலிய சொற்களெல்லாம் ஒன்றற்கு மேற்பட்ட பொருளை யுடையனவாயிருப்ப, அவற்றை ஒருகால் கூறியதுவேயன்றிப் பலகால் உரைத்திலரே! இதனால், 'தெவ்வு' என்னுஞ் சொல் இருபொருள் தருதலின் அதனை இருகாற் கூறினார் என்ற கூற்றுச் சிறிதும் அமைவதன்றாதல் அறியப்படும். ஆகலின், பழைய உரைகாரரனைவரும் மேற்கொண்டு காட்டியுள்ள வடிவமே உண்மையாவதன்றிப் பிரயோகவிவேகநூலார் கொண்டது உண்மையாதல் இன்று என்பது கூறுமமேல விளங்கும். ஆயின், அமரசிங்கன் ஓரோவழி விருத்தம் அமைதல் வேண்டி இருகாற் கூறியாங்குத் தொல்காப்பியரும் அடி நிரம்புதல் வேண்டி இருகால் உரைத்தார் என்று கொள்ளுதல் கூடும் எனின், அன்னதன்று; 'தெவ்வுப் பகையும் கொளற்பொருட்டு மாகும்' என்று கூறின் அடி நிரம்புமாகலின்.

இனி, பழைய உரைகாரர் கொண்ட சொல் யாதோ எனின், 'தேவு' என்பதுவே. ஓலையேட்டில் எழுதுங்கால் மெய்கட்கும் எகரஒகரங்கட்கும் புள்ளியிடும் முறை மேற்கொள்ளப்படாததனான், தேவு என்பது தேவு என்று எழுதப்படும். தொல்காப்பியவுரைகளைப் பதிப்பித்தவர்கள் தெவு என்றே பதிப்பித்தனர். மாந்தரஞ் சேர இரும்பொறை என்பது மாந்தரஞ் சோ இரும்பொறை என்றும், 'சேரன் மடவன்னம்' என்பது 'சோன் மடவன்னம்' என்றும் பதிப்பிக்கப்பட்டமை ஈண்டைக்குக் கருதத்தகும்.

இனி, தேவு என்பதுவே உண்மைப் பாடம் என்பது யாதனிற் பெறப்படும் எனின், கூறுவேன் :

ஆசிரியர் தொல்காப்பியனார் பெரும்பாலும் எதுகை மோனைகள் அமைத்தே சூத்திரம் செய்துள்ளார். எதுகைக்கண், இரண்டா மெழுத் தொன் றெதுகையேயன்றி இனவெதுகை முதலியனவும் அமைந் திருக்கும். இதனைப் பலவிடத்துங் காணலாகும்.

'நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்.'

'கண்ணிமை நொடிஎன அவ்வே மாத்திரை
நுண்ணிதி னுணர்ந்தோர் கண்ட வாறே.'

'ஒன்றறி கிளவி தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் தியற்கை யாகும்.'

'நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே.'

இவ்வாறு வருவனவும்,

'நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே'

என்பதுபோன்று வருவனவும் காண்க. இனி, உரியியலையே நோக்கு வோம் :

'வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொன் மேன.'

'உருஉட் காகும் புரைஉயர் பாகும்
குருவும் கெழுவும் நிறனா குமமே.'

'செல்லல் இன்னல் இன்னா மையே
மல்லல் வளனே ஏபெற் றாகும்.'

'உகப்பே உயர்தல் உவப்பே உவகை
பயப்பே பயனும் பசப்புநிற னாகும்.'

'சீர்த்தி மிகுபுகழ் மாலை இயல்பே
கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்.'

'கதழ்வும் துனைவும் விரைவின் பொருள
அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்.'

இவ்வாறு வந்துள்ளன பல. இனி, இச்சொல் (தேவு) வந்துள்ள சூத்திரத்தின் முன் பின் உள்ள சூத்திரங்களையும் நோக்குவோம்:

'பையுளும் சிறுமையும் நோயின் பொருள
[1] எய்யாமை அறியாமை நன்றுபெரி தாகும்'

என்பதனையும்,

'விறப்பு முறப்பும் வெறுப்பும் செறிவே.'

'கம்பலை சும்மை கலியே அழுங்கல்
என்றிவை நான்கும் அரவப் பொருள.'

என்பவற்றையும், இவற்றின் இடையே உள்ள

'தாவே வலியும் வருத்தமு மாகும்'

என்னும் அடியையும் நோக்கின்,

'தேவுக் கொளற்பொருட்டே தெவ்வுப் பகையாகும்'

என்று பாடம் அமைந்திருக்கும் என்பது எளிதிற் புலனாகும். தொல்காப்பியப் பதிப்புக்களில் சூத்திரத்திலும் உரைகளிலும் உதாரணங்களிலும் வகரமெய் இரட்டாதிருத்தலும் இப்பாடத்தை வலியுறுத்தும்.

இதுகாறும் கூறியவற்றால், கொள்ளுதற் பொருளையுடையதாய் வருஞ் சொல் [2]'தேவு' என்பதுவேயாதல் தேற்றம் உறும். ஆகவே, பிரயோக விவேகநூலார் கூறியது பொருந்தாது என்பதுவும், அதனை மேற்கொண்டு பத்துப்பாட்டுப் பதிப்பிற் பதிப்பித்திருக்கும் பாடம் உண்மைப்பாடமாதல் இன்று என்பதுவும், தொல்காப்பியப் பதிப்புக்களில் தெவு என்று பதிப்பித்திருப்பது தேவு என்பதன் திரிபான வடிவம் என்பதுவும் வெள்ளிடை மலைபோல் தெள்ளிதிற் புலனாகும். இம்முறைமை மேற்கொண்டு நோக்கின்,

'ஏற்றம் நினைவும் துணிவு மாகும்'

1. 'எய்யா மையே அறியா மையே' என்பது ஒருசூத்திரமாகக் கொண்டோர் பலர் பாடம். இளம்பூரணர் ஒரு சூத்திரமாகக் கொண்டாராயினும் 'எய்யாமை அறியாமை' எனனும் பாடமே கொண்டுள்ளார்.

2. கெடுதியில்லை என்னும் பொருளில், தாவலை தேவலை தாவுள்ளே என்று வழங்குஞ் சொற்களின் உண்மைவடிவம் 'தாழ்வில்லை' என்பது. பிணியுற்றோரைக் குறித்து வினவுங்கால் மறுமொழி கூறுவோர் இதனை வழங்குகின்றனர். கொள்ளுதற் பொருட்டில் இன்றும் வழங்கும் 'தேவை' என்னுஞ் சொல் தேவு என்பதனடியில் தோன்றியதாகும்

என்பது தவருன பாடம் என்பதும், அதன்மேல்,

'பொற்பே பொலிவு வறிதுசிறி தாகும்'

என்றிருத்தலின்,

'எற்றம் நினைவும் துணிவு மாகும்'

என்பதுவே உண்மைப்பாடம் ஆகும் என்பதும் அறியலாகும்.

ஆயின், உரையாசிரியரனைவரும்,

'தாவே வலியும் வருத்தமு மாகும்'

என்பதை ஒரு சூத்திரமாகவும்,

'தேவு கொளற்பொருட்டே

என்பதையும்,

'தெவ்வுப் பகையாகும்'

என்பதையும் தனித்தனிச் சூத்திரமாகவும் எண்ணியிருத்தலின், இம் மூன்றனையும் ஒரு சூத்திரமாகக் கோடல் அமையாதன்றே எனின், கூறுவல்.

உரைகாரர்கள், இரண்டடிகளை யுடைய நூற்பா ஒன்றனையே பொருளொக்கத்தால் மூன்று சூத்திரங்களாகக் கொண்டிருக்கின்றனர். இவ்வியலில் பிறவிடத்தும் இவ்வாறே கொண்டிருப்பன காணலாகும். இவையே யல்லாமல், அகத்திணை யியலில்,

'காரும் மாலையும் முல்லை குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர்'

என்னுஞ் சூத்திரத்தையும்,

'வய்குறு விடியல் மருதம் எற்பாடு
நெய்த லாதல் மெய்பெறத் தோன்றும்'

என்னுஞ் சூத்திரத்தையும் பொருளொக்கத்தால் இரண்டு சூத்திரங்களாகப் பிரித்துரைத்திருத்தல் காண்க. இவ்வாறே, வடமொழியிலும் ஒருசுலோகத்தைப் பொருளொக்கால் பல சூத்திரங்களாகப் பிரித்தல் உண்டு.

(1) 'வ்யங்க்யேந ரஹிதாரூடௌ ஸஹிதாது ப்ரயோஜநே |
(2) 'தச்சகூட மகூடம்வா (3) ததேஷா கதிதா த்ரிதா ||

என்னுஞ் [1] சுலோகம் மூன்று சூத்திரங்களாகப் பிரித்துரைக்கப்பட்டுளது. தெலுங்கில், ஆந்த்ரஶப்த சிந்தாமணி 88 ஆர்யாவிருத்தங்களால் அமைந்தது. அஃது 258 சூத்திரங்களாகப் பிரித்துப் பொருள் கூறப்பட்டுளது. இம்முறையை மேற்கொண்டு ஶிரோமணி, ஸ்ரீ, பி. கிருஷ்ணன்நாயரவர்கள் தம் 'காவ்யஜீவித வ்ருத்தி'யிலும் ஒருசுலோகத்தைப் பல சூத்திரங்களாகப் பிரித்துரைத்திருக்கின்றார்கள். இம்முறையையே தொல்காப்பிய உரையாசிரியர்களும் மேற்கொண்டனராயினும் நூல் முழுவதிலும் கடைப்பிடித்திலர். சேனாவரையர்தாமும்,

'உருஉட் காகும் புரைஉயர் பாகும்'
'உகப்பே உயர்தல் உவப்பே உவகை'

என்பவற்றை இரண்டிரண்டு சூத்திரங்களாகக் கொள்ளாமல், தனிச் சூத்திரமாகவே கொண்டுள்ளார். அன்றியும், உரைகாரருள் ஒருவர் ஒருசூத்திரமாகக் கொள்ளுமதனை மற்றொருவர் இரண்டு சூத்திரங்களாகக் கொண்டிருக்கின்றனர்.

'மல்லல் வளனே ஏ பெற்றாகும்'

என்பதனை இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் ஒருசூத்திரமாகக் கொண்டிருக்கின்றனர்; சேனாவரையரும் தெய்வச்சிலையாரும் இரண்டு சூத்திரமாகக் கொண்டிருக்கின்றனர்.

'சீர்த்தி மிகுபுகழ் மாலை இயல்பே'

என்பதனைச் சேனாவரையர் தெய்வச்சிலையார் இளம்பூரணர் இவர்கள் இரண்டு சூத்திரங்களாகக் கொண்டிருக்கின்றனர்; நச்சினார்க்கினியர் மட்டும் ஒருசூத்திரமாகக் கொண்டிருக்கின்றார். பிறண்டும் இவ்வாறு கொள்ளப்பட்டிருப்பன காணலாகும்.

உரியியல் முழுவதனையும் எதுகை முதலியன நோக்கிக் கணக்கிடின், 59 நூற்பாக்களாகக் கோடல் அமையும். ஒன்றிரண்டு கூடுதலாகவும் குறைதலாகவும் எண்ணுதலும் ஆம். ஆயின், அவற்றையே பொருணோக்கால், சூத்திரங்களாகக் கணக்கிடின் 102 சூத்திரங்கள் ஆகும். அவற்றை,

| | | | |
|---|---|---|---|
| இளம்பூரணர் | 99 | சூத்திரங்கள் | ஆகவும், |
| சேனாவரையர் | 100 | ,, | ஆகவும், |
| நச்சினார்க்கினியர் | 98 | ,, | ஆகவும், |
| தெய்வச்சிலையார் | 100 | ,, | ஆகவும் |

1. காவ்யப்ர. 13.

கணக்கிட்டிருக்கின்றனர். இவற்றால், உரையாசிரியர்கள் ஒரேமுறையினைக் கடைப்பிடித்திலர் என்பது அறியப்படும். நிற்க.

மேற் கூறியிருப்பவற்றால், ஆசிரியர்தொலகாப்பியனார் கூறிய பாடம் 'தேவுக் கொளற்பொருட்டு' என்பதுவேயாகும் என்பதூஉம், அதற்குச் சான்று பகர்வன இவை என்பதூஉம் நன்கு விளக்கமுறும்.

# சில சொற்களின் தொல்பொருள்

உலகத்தில் உள்ள வழக்குமொழி (Spoken Language) களில், பழைய சொற்கள் சில வழக்கொழிதலும், புதியனவாகச் சொற்கள் உண்டாதலும் இயல்பு. அன்றி, பழைய சொற்களின் பொருளும் நாளடைவில் மாறிவிடுதல் உண்டு. ஆயினும், பெரும்புலவர் சொற்களின் பொருளை யறிந்து தக்கவாறு வழங்குவர். இம்முறைமை தமிழ்மொழியிலும் காணலாகும். பண்டைப்புலவர் சொற்களின் பொருளைப் பெரும்பாலும் உளங்கொண்டே அவற்றை வழங்கியுள்ளனர். பிற்காலப்புலவர் அவ்வாறு கருதிற்றிலர். கருதுவோர்க்கும் செய்யுளின் எதுகை மோனைக் கட்டுப்பாட்டால் உரிய சொற்களை வழங்குதல் இயலாதாயிற்று; பழைய மரபு தவறி வழங்க நேர்ந்தது. இவற்றால், ஒருபொருளிற் பலசொற்களும், பலபொருளில் ஒருசொல்லும் அமைய வாயின. ஆகலின் நிகண்டுநூலார் அவற்றை மேற்கொண்டு கூறுவாராயினர்.

உண்மையை ஆராயின், ஒருசொற்கு ஒருபொருளே உண்டு என்பது புலனாகும். இஃது, ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'சிறை என்னுஞ் சொல்லும் முன்னர்க் கூறிப்போந்த கட்டு என்னுஞ் சொல்லும் பரியாயச்சொல்லன்றி வேறுவேறு பொருள் தருஞ் சொற்களாம். என்னை? இத்தமிழ்ப்பாஷையில் உலகவழக்காகிய இயற்சொற்களில் ஒருவினையை உணர்த்துதற்கு ஒருசொல் வழங்குதலன்றி இருசொல் வழங்காமையின். [1]சிறை என்பது தடுத்துக்காத்தலை உணர்த்தும். கட்டினன் என்னுஞ் சொல் உண்டான் வந்தான் போனான் என்பனபோலப் புடைபெயர்ச்சித்

---

1. சிறை என்பதன் தொல்வடிவம் செறை என்பது. செறுத்தல் என்னும் வினை, இடைநின்றுதடுத்தல் என்னும் பொருளது. ஆகலின், செறை என்பதுவே தடுப்பது என்னும் பொருளில் வரும். செறு + ஐ = செறை. 'வருபுனலிற் கற்சிறைபோன்று' என்னுமிடத்தில், சிறை என்பது தடுப்பது (அணை) என்னும் பொருளதாதல் அறியத்தக்கது. 'முடைப்புல்லு முக்குறுணித் தண்ணீர் செறுக்கும்' என்பது வழக்கு. தெலுங்கில் செற என்றும், கன்னடத்தில் ஸெறெ என்றும் வழங்குவன ஈண்டு ஒப்பிடற்பாலன. திறை என்பதும் இவ்வாறே தெறை என்பதன் திரிபு. பகையரசனைத் தெறுதலால் வரும் பொருள் தெறை எனப்பட்டது. குடிகள் இறுக்கும் வரிப்பொருளைத் திறை என்னாமையும் அரசர் தரும் பொருளையே திறை என்று வழங்குதலும் நோக்கின், இஃது எளிதிற் புலனாகும். 'விருந்தின் மன்னர் அருங்கலந் தெறுப்ப' (அக. 54) என்பது நோக்கத்தக்கது. செறை தெறை என்பவற்றில் பின்னின்ற ஐகாரத்தால் முதலில் நின்ற எகரம் இகரமாகிச் சிறை திறை என ஒலிப்பதாயிற்று. இகர எகரங்கள் தம்முள் மாறுதல் பெருவழக்கன்றே?

தொழிலுணர்த்துஞ் சொற்கு வேறொருசொல் லின்றி நிற்கும்' என்று எழுதியிருப்பவற்றான் அறியப்படும்.

இம்முறைமை நம் தமிழ்மொழியில் தவறிவரினும் கன்னடமொழியில் பெரும்பாலும் மாறாமல் நிலைத்துளது. வேறுவேறு காலத்தில் இயற்றப்பட்ட பழங்கன்னட நூல்கள் பலவற்றிலும் இந்நியதி பிறழாதிருக்கின்றது. ஆகலின், தமிழ்ச்சொற்கள் சிலவற்றின் தொல்பொருளை யறிதற்குக் கன்னடச்சொற்கள் பெருந்துணை செய்யும். ஈண்டு, தமிழ்ச் சொற்கள் சிலவற்றின் தொல்பொருளை நோக்குவோம்:

## 1. நினைதல்

> [1] 'நினைதல் என்பது கழிந்ததனை நினைதல்'

என்றார் இளம்பூரணர்.

> [2] 'விருப்புற்று நினைதல்; நின்னை மிகவும் நினைந்தேன் என்பது வழக்காதலின்'

என்றார் பேராசிரியர். நினைதல் என்னும் பொருளில்,

> [3] 'உன்னலே படாதல் ஊழ்த்தல் உள்ளுத லொடுசிந் தித்தல்
> முன்னலே வலித்தல் ஊகம் மொழிபவே நினைத்தல் என்போ'

என்னும் அடிகளால், உன்னல் முதலிய எட்டுச் சொற்கள் வரும் என்றார் மண்டல புருடர். அவற்றுள், சிந்தித்தல் ஊகம் என்பன இரண்டும் வடசொற்கள். தமிழ்ச்சொற்களும் தம்பொருளில் வேறுபாடுடையனவே. உள்ளுதலுக்கும் நினைத்தலுக்கும் வேறுபாடு உளது.

> [4] 'உள்ளினெ னல்லெனோ யானே உள்ளி
> நினைத்தனெ னல்லெனோ பெரிதே'

என்னும் அடிகளில் உள்ளுதல் நினைத்தல் என்னும் இரண்டு சொற்களும் முறையே ஒன்றன்பின் ஒன்றாக வழங்கப்பட்டிருந்தலின், அவை, தம் பொருளில் வேறுபாடு உடையனவே ஆகுமன்றே? உள்ளுதல் என்பது ஒன்றனைக்குறித்து முதலில் உள்ளத்திற் கொணர்தல். நினைத்தல் என்பது முன்னால் அறிந்ததொன்றனைக்குறித்து மீண்டு மீண்டும் உள்ளத்திற் கொணர்தல். 'நினைத்து நினைத்துப் பார்க்கிறேன், ஓர்மை வரவில்லை' என்பதும், 'எப்போதும் உங்களைத்தான் நினைத்துக்கொண்டிருக்கிறேன்' என்பதும் அறியத்தக்கன. நினைத்தல் என்னுஞ் சொல், கன்னடமொழியில் இப்பொருளினை உடையதாதல் இதனை வலியுறுத்துகின்றது.

---

1, 2. தொல். மெய்ப்பாட். 'ஆங்கவை யொருபா லாக' என்னுஞ் சூத்திரத்தின் உரை.

3. சூடாமணி நிகண்டு. 8 : 36.

4. குறுந்தொகை. 99.

[1]நினே—ஸ்மரணே

என்பது கர்னாடக ஶப்தமணி தர்ப்பணம். இக்கூறியவற்றால், நினைத்தல் என்பதற்கு ஒன்றனைக்குறித்து மீண்டு மீண்டும் உள்ளத்திற் கொணர்தல் என்னும் பொருளே உரியது என்பது புலனாதல் கூடும்.

## 2. புரத்தல்

புரத்தல் என்னுஞ் சொற்கு வண்மை, காத்தல், வழங்குதல் என்னும் பொருளைப் [2]பிங்கலந்தை கூறுகின்றது. அச்சொற்கு, காத்தல் என்னும் பொருளினையே பயில வழங்குகின்றனர். ஆயின், புரத்தல் என்பது உணவு கொடுத்து ஓம்புதல் என்னும் பொருளது என்பது,

[3]'மாலை மருதம் பண்ணி...
... ... ...
வரவெமர் மறந்தனர் அதுநீ
புரவுக்கடன் பூண்ட வண்மை யானே'

என்னுஞ் செய்யுளால் புலனாகின்றது. 'புரவு...வண்மையான்' என்பதற்கு, 'கொடுத்தோம்புதலைக் கடனாக மேற்கொண்ட வண்மையான்' என்று எழுதியிருக்கும் உரை அறியத்தக்கது.

[4]'இரவலர் புரவலை நீயு மல்லை'

என்றும்,

[5]'புரப்போர் புன்கண் கூர' (புரப்போர்—புரக்கப்படுங்கேளிர்)

என்றும்,

[6]'புரந்தார்கண் ணீர்மல்கச் சாகற்பின் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து'

என்றும் வந்துள்ளவற்றில், புரத்தல் என்னும் வினையின் பொருளும் நோக்கற்பாலது.

[7]'பொரெ—போஷணே

என்னும் ஶப்தமணி தர்ப்பணத்தாலும் புரத்தல் என்னுஞ் சொற்கு உணவு கொடுத்து ஓம்புதல் என்னும் பொருள் வலியுறுகின்றது. உணவுப்பொருள் விளையும் நிலத்திற்குப் 'புரவு' என்று பெயர் வழங்குதலும் ஈண்டுக் கருதுதற்பாலது.

---

1. ஶப்தமணி தர்ப்பணம். தாதுப்ரகரணம்: 437.
2. பிங்கல. 10: 828.
3. புற. 149.
4. „ 162.
5. „ 72.
6. குறள். 780.
7. ஶப்தமணி. தாது: 584. உகர ஒகரம் தம்முள் மாறுதல் இயல்பாகலின், புர என்பது கன்னடத்தில் பொரெ என்று வழங்குகின்றது.

இதுகாறும் கூறியவற்றால், புரத்தல் என்பதற்கு உணவு கொடுத்து ஓம்புதல் என்னும் பொருளே உரியதாதல் அறியலாகும்.

## 3. மிளிர்தல்

மிளிர்தல் என்பது பண்டைச் செய்யுட்களில் பிறழ்தல் என்னும் பொருளில் பயின்றுவந்துளது.

[1] 'அரிக்குரற் றடாரியின் யாமை மிளிர

[2] 'கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டி'

என்னும் அடிகளில் வந்துள்ள மிளிர்தல் என்னுஞ் சொற்குப் பிறழ்தல் என்றே உரை எழுதப்பட்டிருக்கின்றது. ஆயின்,

[3] 'உளிவாயச் சுரையின் மிளிர மிண்டி'

என்னும் அடியில் உள்ள மிளிர்தல் என்பதற்குக் கீழ்மேலாதல் என்று உரை எழுதப்பட்டுளது. ஈண்டும் பிறழுதல் என்னும் பொருள் ஓராற்றான் அமையும். பிறழ்தலுக்கும் கீழ்மேலாதற்கும் சிறிது வேற்றுமை உண்டு. சிலப்பதிகாரத்தில்,

[4] 'வாளை, மலங்குமிளிர செறுவின் விலங்கப பாயிற
கலங்கலு முணடிக காரிகை'

என்னுமிடத்து வந்துள்ள மிளிர்தல் என்னுஞ் சொற்கு நெளிதல் என்று உரை எழுதியிருப்பினும் பிறழ்தல் என்னும் பொருள் அமையும். இவ்வாறன்றி, விளங்குதல் என்னும் பொருளதாகச் சங்கநூல்களில் இச்சொல் வந்திலது. சிந்தாமணியில்,

[5] 'மிளிர்ந்துவீ ழுருவியும'

என்னுமிடத்துள்ள மிளிர்தல் என்பதற்குக் குதித்தல் என்று பொருளெழுதியிருக்கின்றார். ஆசிரிய நிகண்டில், மிளிர் என்பதற்கு ஒளி என்று பொருள் கூறப்பட்டுளது. இதற்கு இலக்கிய வழக்கும் உளது. இவையெல்லாம் பிற்காலத்தனவே.

கன்னடமொழியில், மீன் பிறழ்தலைக் கூறுமிடத்து இச்சொல்லை வழங்குவர்; அன்றி, கொடியாடுதலுக்கும் பிரயோகிப்பர்.

[6] 'மிளிர்வ விவித கேதனங்களிம்

என்பது காண்க. கொடியாடுகையில் அதன் ஒரு பகுதி பிறழ்தலின் இஃது அமைவதாயிற்று.

---

1. புறம். 249.
2. புறம். 158.
3. பெரும்பாண். 92.
4. சிலப். 10: 79-81.
5. சீவகசிந்தா. 148.
6. பம்ப பாரதம் 1: 58.

'மிளிர்—லுடனே'

என்பது ஶப்தமணி தர்ப்பணம்.

இவற்றால், மிளிர் என்னுஞ் சொற்குப் பிறழ்தல் என்னும் பொருளே உரியதாதல் அறியப்படும்.

## 4. பண்ணுதல்

பண்ணுதல் என்னுஞ் சொல் தயார் செய்தல், அலங்கரித்தல் முதலிய பொருளில் வழங்குகின்றது. ஆயின், பண்டைச்செய்யுட்களில், தயார் செய்தல் என்னும் பொருளில் இச்சொல் பெருவழக்காய் வந்திருத்தலின் அதுவே இதன் நேர்பொருளாகும்.

[2] 'போயாழ் அமைவரப் பண்ணி'

[3] 'புலவர், பூந்தலை யானையொடு புனைதேர் பண்ணவும்'

என்னும் அடிகளில், பண்ணுதல் என்பது அமைத்தல்—தயார் செய்தல் என்னும் பொருளிலேயே வந்துளது காண்க. உரையாளரும் இப்பொருளே எழுதியிருக்கின்றார். கன்னடத்தில்,

[4] 'பண்—ஸஜ்ஜீகரணே'

என்று கூறப்பட்டுளது. இதனால், பண் என்னும் வினைக்குத் தமிழில் பண்டு வழங்கிய பொருள் கன்னடத்திலும் உளதாதல் அறியலாகும். இக்காலத்தில், பண்ணுதல் என்பதற்குச் [5] செய்தல் என்னும் பொது வினையின் பொருளையே கூறுகின்றனர். அதனால் அச்சொல்லின் (பண்ணுதல் என்னுஞ் சொல்) பொருளில் சித்தஞ் செய்தல், தயார் செய்தல் என்னும் பிறமொழிச் சொற்களை வழங்குகின்றனர். இவ்வாறே தமிழ்ச் சொற்களின் பொருளை நன்கு அறியாததனால் வழங்கப்படும் பிற சொற்கள் பல.

## 5. நிகழ்தல்

நிகழ்தல் என்னுஞ் சொல் நடைபெறுதல், சம்பவித்தல், செல்லுதல், விளங்குதல் என்னும் பொருளில் வழங்குகின்றது. நிகழ்காலம் என்பதனால், நடைபெறுதல் என்னும் பொருளே பயில்வதாதல் அறியப்படும். விளங்குதல் என்னும் பொருளும் பயில்வதுவே.

[6] 'நிகழ்ந்த வண்ணம் நீநனி யுணரச்
செப்ப லான்றிசின்'

என்னுமிடத்து, நிகழ்ந்த என்பது முன்பு நடந்த என்னும் பொருளில் வந்துளது. நிகழ்ச்சி என்னுஞ் சொல் சம்பவம், செய்தி என்னும்

1. ஶப்தமணி. தாது: 596.
2. மலைபடு. 37, 8.
3. புறம். 12.
4. ஶப்த. தாது: 371.
5. தொல். சொல். சூ: 25. சே. உரை.
6. குறிஞ்சிப். 33, 4.

பொருளிற் பயில்கின்றது. நிகழ்தல் என்பது முயற்சி, க்யாதி என்னும் பொருளில் கன்னடத்தில் வழங்குகின்றது.

[1] 'நிகழ் —உத்யோகக்யாதயோ:

என்பது ஸப்தமணி தர்ப்பணம்.

இதனை நோக்கின், நிகழ்தல் என்பதற்குப் பிரசித்தியாதல் என்னும் பொருளே தொன்மையது என்பதும், அதனின்று நாளடைவில் விளங்குதல் என்னும் பொருள் வருவதாயிற்று என்பதும் புலனாதல் கூடும். பிரசித்தியுடையது பலருக்குந் தெரியுமாகலின், அது, விளங்குதல் என்னும் பொருளும் உடையதாயிற்று. முன்னர் நடந்த செய்தியும், பின்னர் நடைபெறப்போகுஞ் செய்தியும்போலன்றி, நடைபெறுமது நேரே அறியப்படுமாகலின் அது க்யாதி பிரசித்தி உடையதாகும். அதனால், நிகழ்காலம் என்பதில் இப்பொருள் அமைவுறும்.

## 6. நரலுதல்

நரலுதல் என்னுஞ் சொல் ஒலித்தல் என்னும் பொருளிற் பெருவழக்காய் வழங்குகின்றது.

[2] 'வளைநரல வயிரார்ப்ப

[3] 'ஆடுகழை நரலும்'

என்பன காண்க. ஆயின்,

[4] 'குருகுநரல மனைமரத்தான்
மீன்சீவும பாண்சேரியொடு'

என்னுமிடத்தில், நரலுதல் என்பது கூவுதல் என்னும் பொருளில் வந்துளது. 'குருகு நரல' என்பதற்கு, 'குருகு என்னும் பறவைகள் கூப்பிடும்படி' என்று நச்சினார்க்கினியர் உரை எழுதியிருக்கின்றார்.

கன்னடமொழியில், நரல் என்பதற்கு வேதனைத்தொனி, அஃதாவது 'நோவினால் அரற்றும் ஒலி' என்னும் பொருள் உளது.

[5] 'நரல்—வேதனத்வநௌ'

என்னுஞ் சூத்திரத்தால் அஃது அறியப்படும். அப்பொருள்,

[6] 'புலம்பொடு வந்த பொழுதுகொள் வாடை
இலங்குபூங் கரும்பி னேர்கழை யிருந்த
வெண்குருகு நரல வீசும்
நுண்பஃ றுவலைய தண்பனி நாளே'

என்னுமிடத்து அமைவதாகக் காண்கின்றது.

1. ஸப்த. தாது: 911.
2. மதுரைக்காஞ்சி. 185.
3. புற. 120.
4. மதுரைக்கா. 268, 9.
5. ஸப்த. தாது: 626.
6. அக. 13.

[1] 'வெண்குருகு நரலுந் தண்கமழ் கானற்
பூமலி பொதும்பா நாண்மலர் மயக்கி
விலங்குதிரை உடைதருந் துறை'

என்னுமிடத்தும் அமைதல் கூடும். இவற்றை நோக்கும்பொழுது, நரலுதல் என்னுஞ் சொல் முதலில் மக்கள் முதலிய உயிருடைப் பொருள்கள் நோயினால் ஆற்றும் ஒலியைக் குறிக்க வழங்கப்பட்டு, நாளடைவில் பிற பொருள்களில் உண்டாகும் ஓசையைக் குறித்தற்கும் வந்திருத்தல் வேண்டும் எனத் தோன்றுகின்றது.

## 7. பார்த்தல்

பார்த்தல் என்னுஞ் சொல் இக்காலத்தில், காணுதல், நோக்குதல் என்னும் பொருள்களில் வழங்குகின்றது; சமயம் எதிர்நோக்குதல் என்னும் பொருளிலும் வருகின்றது.

[2] 'வரிவயங் கிரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்'

என்னும் அடியில், இச்சொல இப்பொருளில் வந்துளது. கன்னடமொழியில் பார் என்னுஞ் சொல் சமயத்தை நோக்குதல் என்னும் பொருளையே உடையதாயிருக்கின்றது.

[3] 'பாா—ஸமயாநவேக்ஷணே'

என்பது ஶப்தமணி தர்ப்பணம். இதனை நோக்குமிடத்து, பார் என்பதற்குச் சமயம் நோக்குதல் என்னும் பொருளே தொன்மையதெனவும் நாளடைவில் காணுதல் என்னும் பொருளில் வழங்குவதாயிற்று எனவும் புலனாதல் கூடும்.

## 8. நசை

நசை என்னுஞ் சொல் விருப்பம் என்னும் பொருளில் வழங்குகின்றது. பலதிறப்பட்ட விருப்பத்திற்கும் இச்சொல் வழங்கப்படுகின்றது. ஆயின், கன்னடத்தில் நசை என்னுஞ் சொல் புணர்ச்சி வேட்கையைக் குறிப்பதா யுளது.

[4] 'பவிதொடெ ஸல்லகீகிஸலயங்கள ஞெயயனெரீடி மெய்யதீன்
மஸெதொடெ கோடொளிட்டொரவி நீர்கெளவிர் தொடெ தந்துநீரனு
டிவி நஸெயிச்சே யாதோடொடகூடி பழல்தொடெ கர்ணவாதமம்
பஸரிவி தன்ன கைபிடியவோல் பிடியம் பிடிதிர்து தொங்திபம்'

என்னுஞ் செய்யுளில், 'ஒரு களிறு தன்பிடிக்கு நசையிச்சை உண்டாய பொழுது அதனொடு கூடி' என்று வந்திருத்தல் காண்க. தமிழிலும் இப்பொருள் அமைவுறும் இடன் உளது.

---

1. குறுந். 381.   2. அகம். 218.
3. ஶப்த. தாது: 558.   4. சந்த்ரப்ரபபுராணம் 5 : 64.

(இது ஸ்ரீ H. சேஷையங்காரவர்களால் அறிந்தது)

'நசைபெரிதுடையர் நல்கலு நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பிளக்கும்
அன்பின தோழி அவர் சென்ற வாறே'

என்னுஞ் செய்யுளில், நசை என்னுஞ் சொற்கு ஆசை என்று கூறுதலினும் புணர்ச்சிவேட்கை என்று பொருள் கூறின் சாலச் சிறக்குமன்றே? கன்னடத்தி லுள்ள பொருளையும் இத்தகைய பிரயோகங்களையும் நோக்கின், நசை என்னுஞ் சொல்லின் தொல்பொருள் புணர்ச்சிக்கணுள்ள வேட்கைமட்டுமே யாகும் எனவும், பின்னர் அது பொதுவாய் நின்று பலதிறப்பட்ட பொருள்கள்மேலுள்ள ஆசையையும் குறிப்பதாயிற்று எனவும் கொள்ளுதல் அமையும் எனல் போதரும்.

## 9. அட்டை

இனி, 'அட்டையாடல்' என்னுந் தொடரில் அட்டை என்னுஞ் சொல்லின் பொருள் நன்கு அறியப்பட்டிலது. [2] ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'அட்டை அற்றுழியும் ஊர்ந்துமாறுபோல.. உடம்பு ஆடுதலின் அட்டையாடல் எனவும் இதனைக் கூறுப' என்று எழுதினர். அட்டை என்பதற்கு ஊர்ந்து செல்லும் ஒருவகைப் பிராணி என்பதுவே அவர் கொண்ட பொருள்.

கன்னடமொழியில், அட்டை (அட்டெ) என்னுஞ் சொற்குக் குறைத்தலைப் பிணம்— கவந்தம என்பதுவே பொருள். போர்க்கள வருணனைகளில் [3] இச்சொல் பயின்று வருகின்றது. தெலுங்குமொழியிலும் இச்சொல் (அட்ட) இப்பொருளில் பயின்று வழங்குகின்றது. தமிழில் சேந்தன் திவாகரத்தில் உடற்குறையின் பெயராக அட்டை என்னுஞ் சொல் கூறப்பட்டுளது. ஆயின், இலக்கியங்களிற் பயின்றிலது.

அட்டை என்னுஞ் சொல் அடு என்னும் வினையினின்று அமைந்தது.

இவ்வாறே மலையாளமொழியினால் பொருள் விளங்கத்தக்க தமிழ்ச் சொற்களும் சில உள. தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தில்,

[4] 'பனியென வருஉங் கால வேற்றுமைக
கத்தும் இன்னுஞ் சாரியை ஆகும்'

என்னுஞ் சூத்திரத்தின் உரையில், ஆசிரியர் நச்சினார்க்கினியர், [5] 'பனி என்று சொல்ல வருகின்ற,நோயன்றிக் காலத்தை உணர்கின்ற வேற்றுமை

1. குறுந். 37.
2. தொல். புறத். சூ. 16 உரை.
3. பம்பபார. 85.
4. எழுத்ததி. 241.
5. பனியைக் குறித்தற்கு மலையாளத்தில் மஞ்ஞு என்பதுவும், கன்னடத்தில் மஞ்ஜு என்பதுவும் தெலுங்கில் மஞ்சு என்பதுவும் வழங்குகின்றன.

முடிபுடைய பெயர்க்கு' என்று எழுதியிருக்கின்றார். அதனால், 'பனி என்னுஞ் சொல் ஒரு நோயையுங் குறிக்கும் என்பது அறியப்படும். ஆயின், அப்பொருள் இப்பொழுது விளங்குமாறில்லை. மலையாளத்தில் பனி என்பது காய்ச்சலுக்குப் பெயராய் வழங்குகின்றது. அப்பொருளால் நச்சினார்க்கினியருரை விளங்குவதாகும். இனி,

[1] 'வளிஎன வரூஉம் பூதக கிளவியும்
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப'

என்னுஞ் சூத்திரத்தின் உரையில் நச்சினார்க்கினியர், 'வளி என்று சொல்ல வருகின்ற, இடக்கரல்லாத ஐம்பெரும் பூதங்களில் ஒன்றை உணர நின்ற சொல்லும்' என்று எழுதியிருக்கின்றார். அதனால், வளி என்பதற்கு இடக்கர்ப்பொருளொன்றும் உண்டு என்பது அறிய வருகின்றது. அப்பொருள் இது எனத் தமிழில் அறியுமாறில்லை. மலையாளத்தில் வளி என்னுஞ் சொல்லை அபானவாயுவிற்கு வழங்குகின்றனர். அதுவே நச்சினார்க்கினியர் எழுதியுள்ள இடக்கர்ப்பொருளாகும்.

போழ் என்னுஞ் சொல் ஒரு பொருளினின்று கீழ்ந்த பகுதியைக் குறிக்கும்.

[2] 'நாரும் [3]போழுஞ் செய்துண்டு'
[4] 'கட்டி னிணக்கும் இழிசினன் கையது
போழ்தூண் டூசியின் விரைந்தன்று'

என்னுமிடங்களில், போழ் என்பது அப்பொருளில் வந்துள்ளது. அஃது இக்காலத்தில் வழக்கொழிந்தது. ஆயின், அச்சொல் கன்னடத்தில் வழக்கிற் பயில்கின்றது. கறிக்குத் திருத்திய வாழைக்காய்த்துண்டு முதலியவற்றைப் போழ் என்றே வழங்குகின்றனர். மலையாளத்தில் இச்சொல் சிறிது திரிந்து வழங்குகின்றது. இவ்வாறு தமிழில் வழக்கிறந்த சொற்களும் திரிசொற்களும் கன்னடம் மலையாளம் தெலுங்கு இம்மொழிகளில் இயற்சொற்களாய் எல்லாராலும் வழங்கப்படுகின்றன.

இக்கூறியவற்றால், தமிழ்ச்சொற்களின் தொல்பொருள் இது எனத் துணிதற்கும், தமிழ்ச்சொற்களின் பொருளை அறிதற்கும் கன்னடம் மலையாளம் முதலிய மொழிகள் உதவியாகின்றன என்பது தெளிவுறும். இவ்வாறே அம்மொழிகளில் சிலசொற்களின் பொருளை அறிதற்குத் தமிழ்மொழி துணைநிற்றலும் உண்டு. இவற்றால் இம்மொழிகளின் தொடர்பு நன்கு அறியப்படும்.

வே. வேங்கடராஜுலு

---

1. எழுத். 242.
2. புற. 370.
3. போழ் என்பது அகணி முதலியவற்றிற் கீழ்ந்தது.
4. புற. 82.

ஸ்ரீ

# நல்லடிக்கோன்

## (ராவ்ஸாஹிப் மு. இராகவையங்கார்)

சோழவேந்தரின் வமிசாவளியைவிரித்துக்கூறும் சாஸனங்களிலே, லெய்டன் (The Leiden grant) அன்பில், திருவாலங்காட்டுச் செப்புப் பட்டயங்கள் சிறந்தவை என்பது சாஸனவாராய்ச்சியாளர் நன்கறிவர். மனு, மாந்தாதா, சிபி முதலிய புராணகாலத்து அரசர்களையும், சென்னி கிள்ளி, கரிகாலன், செங்கணான் என்ற சங்ககாலத்து அரசர்களையும் சூரியவமிசத்துச் சோழரின் அதிமுன்னோர்களாக அப் பட்டயங்கள் கூறுகின்றன. இவருள், செங்கணான் என்பவன் பொய்கையாரது களவழிப்பாடல்கொண்ட பேரரசன் என்பது, களவழிநாற்பது முதலிய சங்கநூல்களாற் பிரசித்தமானது. இச் சங்ககாலத்து அரசருள்ளே கரிகாலனுக்குப்பின் கோச்செங்கணான் ஆட்சிசெய்தவன் என்று கூறுவதில், அம்மூன்று செப்பேடுகளும் ஒத்துள்ளன. ஆனால், செங்கணானையடுத்துக் கோக்கிள்ளி என்பானை லெய்டன்பட்டயம் குறிப்பிட, அச்சோழற்குப்பின் அவன்மகனொருவனை அன்பிற்பட்டயங் கூறுகின்றது. அதுபற்றி அச்சாஸனங் கூறும் வடமொழிச் சுலோகத்தின் மொழிபெயர்ப்பு வருமாறு:—

"கரிகாலன் உலகெலாம் ஆட்சிபுரிந்து சென்றபின், கோச்செங்கணான் என்ற வேந்தன் அவன் வழியில் உதித்தனன். அவன், கௌரீசனான சிவபிரானுக்கு எல்லா நாடுகளிலும் ஆலயங்கள் அமைத்தான். அவனுக்கு நல்லடிக்கோன் என்ற அரசர்சூடாமணி பிறந்தான்".

இதனால், "எண்டோளீசற் கெழில்மாடம் எழுபதுசெய்து உலகமாண்டவன்" என்று திருமங்கையாழ்வாரால் புகழப்பட்ட கோச்செங்கணானுக்கு, நல்லடிக்கோன் என்ற செல்வப் புதல்வனொருவன் பிறந்து ஆட்சிபுரிந்தவன் என்பது தெரியலாம். இஃது அரியதோர் செய்தியேயாம். இச்செய்திகுறிக்கும் அன்பிற்பட்டயம்,[1] முதற்பராந்தகசோழன் பேரனாய்ப் பத்தாம்நூற்றாண்டில் ஆண்ட சுந்தரசோழன் காலத்து அமைந்ததாகும். சோழவமிசாவளி கூறும் ஏனைய லெய்டன் திருவாலங்காட்டுப் பட்டயங்களோ, அச்சுந்தரசோழன் பேரனான முதல் இராஜேந்திர சோழன் ஆட்சிக்காலத்து உண்டானவை. ஆகவே,

1. ஸ்ரீ T. A. கோபிநாத ராயர் அவர்களால் இச்சாஸனம் நன்கு பதிப்பிடப்பட்டுள்ளது.—Ep. Ind. Vol. XV, No. 5, pp. 46, 60 and 68.

பழைமைவாய்ந்த அன்பிற்பட்டயங் கூறுவது அறிஞர்களின் மதிப்பிற் குரியதென்பதில் ஐயமில்லை.

இனி, நல்லடிக்கோன் என்ற பெயர்க்கு, நன்மைக்கு மூலமான அரசன் என்பது பொருளாகும். நன்மைக்கு அடியான காலத்தை 'நல்லடிக் காலம்' என்பர் முன்னோர்.[1] இதனால், நாட்டுக்கு நன்மை விளைத்தவன் என்ற கருத்தில் நல்லடிக்கோன் என்ற நாமம் செங்கணான் மகனுக்கு வழங்கியதென்று கருதக்கூடியது.

சங்ககாலத்து அரசர்களேனும் மக்கட்கேனும் வழங்கக்காணாத இவ் வரிய பெயர்வழக்கை சாஸனமூலம் முதலில் நான் அறியநேர்ந்தபோது அது புதுமையாகவே தோன்றியது. ஆயினும், அகநானூற்றை ஆராய்ந்து வருங்கால், அதன் 356-ம் பாட்டால் அப்புதுமை மாறலாயிற்று. அப் பாட்டின் செய்தி வருமாறு:—

இரந்து பின்னின்ற தலைவனுக்கு அவன்குறையை நீக்கியுதவுவ தாகக் கூறிய தோழி, தலைமகள்முன் சென்று அவன்குறை தீர்க்கும்படி வேண்டிமிடத்து—" தலைவி! நம் தலைவன் ஊர்ந்தவே என்னைத் திடீ ரென்றகண்டு என் பொற்றொடி அணிந்த கையைப் பற்றிக்கொண்டான். உடனே நான் 'அன்னாய்' என்று கூப்பிட, அதற்கஞ்சி அவன் தான் பிடித்த கையை நெகிழவிட்டுச் சென்றுவிட்டனன். இச்செய்தியைத் தாய்க்கும் இதுவரை நான் சொல்லவில்லை" என்று கூறி, மேலும் அவள் உரைத்ததாவது—

" நறவோக, கடுமபகட் டியானைச சோழர் மருகன்
நெடுங்கதிர் நெல்லின் வல்லங் கிழவோன்
நல்லடி யுள்ளா னாகவு மொலலார்[2]
கதவ முயறலு முயல்ப ; அதனால் அன்று
ஒலிபல கூந்தல் !, நம்வயி னருளாது
கொன்றனை னாயினுங் கொலைபழு தன்றே ;

மின்னீ ரோதி ! என்னைநின் குறிப்பே"

"தேர்யானைப் படைகளையுடையவனும், சோழர்குலத் தோன்றலு மான நல்லடி என்பான் நாடளிக்கும் அரசனாயிருப்பவும், மனமொவ் வாத அயலார் இனி நம் மனைக்கதவைத் திறந்து உட்புக முயலவுங் கூடும். இச்செயல் நிகழ்தற்குமுன், நம் தலைவன் அருளின்றி நம்மைக் கொன்றனனாயினும் அது குற்றமன்று. தலைவி! இனி நின் உள்ளக் குறிப்பு யாதோ"—என்பது. ஈண்டு,

1. 'ஒன்னார்' என்றும் பிரதிபேதம்.

2. 'மகாபலி......ராஜ்யம் பண்ணுகையால் வந்த பொல்லாக்காலம் போய் நல்லடிக்காலமாயிற்று'—(ஈடு. 7, 4, 1).

"நல்லடி யுள்ளா ளுகவும் ஒல்லார்
கதவ முயறலு முயல்ப"

என்றது, சோழனது ஆணைச்சிறப்பினைக் குறித்தபடியாம். 'ஒல்லார் கதவ முயறல்—அயலார் நம் கதவைத் திறந்து உட்புக முயலுதல் என்றவாறு. "உரவுக்களிறு போலவந் திரவுக் கதவமுயறல், கேளே மல்லேம்" (குறுந். 244) என்ற முன்னோர்கூற்று இங்கு ஒப்பிடத் தகும். மடவாரது கற்பினைக் காத்தற்கு "அரசவேலி யல்லது யாவதும் புரைதீர் வேலி இல்லை" யாதலின் 'நல்லடி யுள்ளானுகவும்' என்றும், அவ்வேலி நன்கமைந்த இந்நாளினும், தலைவனருளாமை காரணமாக அவ் வரம்பை அழிக்க முயலும் அயலாரும் உளர் என்பது தோன்ற 'ஒல்லார் கதவ முயறலு முயல்ப' என்றும் தோழி கூறினள். தெரு விடையே என்பால் இரந்துநின்ற தலைவற்கு நீ குறைநேராது மறுத் தனையாயின், அயலார் நம் மனைப்புகுந்து பணம்பேசி உன்னைக் கைப் பற்றவும் கூடுமாதலால் நம் வாழ்வழியும்; அதனால் நீ விரைந்து தலை வனை ஏற்கத்தகும் என்பது கருத்து.

இவற்றால், சோழர்குடித் தோன்றலான நல்லடியின் ஆட்சித்திறம் சங்ககாலத்துப் புலவர்பெருமக்களாற் புகழக்கூடியதாயிருந்தது என்பது தெளிவாம். வளமும் அரணும் வாய்ந்த வல்லம் என்ற நகரம், இந் நல்லடி யரசனுக்குச் சிறப்புடையதாயிருந்த தென்பது 'வல்லங் கிழ வோன்' என இவன் விசேடிக்கப்படுதலால் தெரிகின்றது. இவ்வாறு பாணர் புகழ்ந்த நல்லடியே, அன்பிற்பட்டயங் கூறும் நல்லடிக்கோன் என்பதற்கு ஆதாரம் இல்லை. எனினும், அவ்விருவரும் சங்ககாலத்து விளங்கிய நல்லரசரா யிருத்தலாலும், வேறெவரும் தரியாத பெயர்வழக் குடைமையாலும், சோழர் குலத்தவராயிருப்பதாலும் சாஸனமும் அக நானூறுங் கூறும் அவ்விருவரும் ஒருவரேயாதலும் என்று கருதல் பொருத்தமாகின்றது.

# அண்ணாமலை ரெட்டியார்

அண்ணாமலை ரெட்டியார் என்ற பெயரைக் கொண்டவர் நாமறிந்த வரையில் இருவருளர். ஒருவர் காவடிச் சிந்து பாடிய அண்ணாமலை ரெட்டியார். இவரது காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி. இவருடைய பெயர் நின்று நிலவுவதற்கான வகையில் காவடிச் சிந்து, சிந்து முதலான நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

மற்றொருவரான அண்ணாமலை ரெட்டியார் பெருங்கவிஞராய்த் திகழ்ந்த சிவப்பிரகாச சுவாமிகளைப் போற்றி ஆதரித்தவர். இவர் பதினேழாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்தவர் என்று பொதுவாகக் கூறுதல் இயலுமேயன்றி இன்ன ஆண்டு பிறந்தார் என்று கூறவியலாது. இவரது தந்தையார் இலிங்கா ரெட்டியார் எனப் பெயர் பெறுவர். இவர்கள் முன்னோரில் விஜயநகரத்தை யாண்ட அரசர்களது வகையைச் சார்ந்த கொண்டவீடு ரெட்டிகள் வழியினர். பண்ட குலத்தினர் என்று கூறுவர். இவர்களது வீட்டுப் பெயர் வல்லகோல். வீரசைவ சமயத்தினர். விஜயநகர அரசாட்சியில் வல்லகோல் வீரமு ரெட்டியார் என்பவர் திருச்சிராப்பள்ளி ஜில்லாவிலுள்ள பெரம்பலூர் தாலூக்காவையும், அந்த தாலூக்காவின் வடஎல்லையாக ஓடும் வெள்ளாற்றின் வடகரையிலுள்ள பல ஊர்களையும் காரியகர்த்தராக இருந்து கவனித்து வருமாறு நியமிக்கப்பட்டார். இவருக்குப்பின் இவரது புத்திரரான இலிங்கா ரெட்டியார் என்பார் வெங்கடபதி தேவ மகாராயர் காலத்திலே அதே சீமைக்குக் காரியகர்த்தராக இருந்தார். இலிங்கா ரெட்டியாரும் வீரசைவரே. சிவ பக்தியிற் சிறந்தவர். கல்வி யறிவு ஒழுக்கங்களில் மேம்பட்டவர். இவர் தமது காரியகர்த்த வட்டகைக்கு அணித்தான திருமுதுகுன்றம் எனப் பெயரிய விருத்தாசலத்திலே எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்மீது அதிகப் பற்றுடையவர். பழமலை நாதரையும், பெரியம்மை நாச்சியாரையும் எப்பொழுதும் நினைவிற் கொண்டவர். இவர் நாள்தோறும் திருமுதுகுன்று சென்று கடவுளைத் தரிசனஞ் செய்து வருவார். வெள்ளாற்றுப் பெருக்கால் அடிக்கடி திருமுதுகுன்று செல்வது தடைபட்டு வந்தது. அது காரணமாக வாலிகண்டபுரத்தை[1] யடுத்த வெங்கனூரிலே ஒரு கோயில் கட்டி அதனில் பழமலைநாதரையும்,

1. இவ்வூர் திருச்சிராப்பள்ளியிலிருந்து சென்னை செல்லும் சாலையிலுள்ளது. பெரம்பலூருக்கு நான்கு கட்டை தொலைவிலுள்ளது.

பெரியம்மை முதலான தேவதைகளையும் தாபித்து கத சாலிவாகன சகாப் தம் ௲ருசயரு உருத்திரோற்காரி௵ வைகாசி௴ பூர்வ பட்சத்துத் துவா தசியும் அத்த நட்சத்திரமும் கூடிய சுபதினத்திலே கும்பாபிஷேகமும் செய்தார். இந்த வெங்கனூர் வெண்கனூர் என்றும் சொல்லப்படும். மேல்கண்ட செய்தி நடந்த காலம் ஆங்கிலவாண்டு 1623-ம் ஆண்டு மே மாதம் 12-ம் தேதியாகும். இச்செய்திகளைக் குறிக்கும் கல்வெட்டொன்று வெங்கனூர்க் கோயில் கோபுரத்தில் வலது புறமாகக் காணப்படுகிறது. அது வருமாறு :[1]

ஸுபமஸ்து | ஸ்வஸ்தி ஸ்ரீமந் மகா மண்டலேசுர அரிய தளவிபாடன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடாதான் பூருவ தக்ஷிண பச்சிம உத்திர சது சமுத்திராதிபதி ஸ்ரீவேங்கிடபதி தேவர் மகாராயர்[2] பிறுதிவி[3] ராச்சியம் பண்ணியருளா நின்ற சகாற்தம் ௲ருசயரு இதன் மேல் செல்லாநின்ற உருத்திரோற் காரி௵ வையாசி௴ நடுமாத மண்டலத்துக் கிராமங்கன்னவள நாட்டு வன்னடாகிய வெண்பாற நாட்டுல செஞ்சி வெங்கப்ப நாயக்கரய்யனுக்கும் நாட்டவற்குத் தன்மமாக நாட்டினையான செகனப் பிரகண்ட ராய வேசியா புயங்க சங்கிராம தனராசிய மண்டலத்துக்கு ரதக வல்லகோல் எரமு ரெட்டியார் புத்திரன் லிங்கா ரெட்டியார் தன்மமானது இவ் வருஷத்து ரிஷப நாயற்று[4] பூருவ பக்ஷத்து துவாதசியும அத்த நக்ஷத் திரமும் பெற்ற குருவாரத்து நாள் விருத்தாசலத்துக்கு பிறதிஷ்டமான[5] வெண்கனூரில் உடையவர் பழமலைநாத சுவாமியள் பெரியம்மை நாச்சி யார். முதலான தேவதைகளையும உற்சவ விசகிறகங்கள் விக்கினேசுரன் முதல் சண்டேசுரன் பரியந்தமுண்டான விக்கிறகங்களையும் இன்னாளில் இந்த திதி வார நக்ஷத்திரத்தில் பிழைபொறுத்த குருக்கள் கையினாலே பிருதிஷ்டை பண்ணுவித்து பூசை நெய்வேத்தியமும் நடத்திவிச்சு கெர்ப் பக்கிரகம் அர்த்த மண்டபம மகா மண்டபம் நிர்த்த மண்டபம் உள் பிரகாரம் இரண்டாம் பிரகாரம் கோபுர முதலான

[இதன் தென்புறம்]

கயிங்கிலியமும் செய்து முடிச்சு தானம் பரிகலம் உண்டு பண்ணிவிக்கை யில் தானம் யேற்பாடானது சிவதுவிசக் கொத்துக்கு திருத்தோணி

1. இது 1913-ம் ஆண்டு 1 நெம்பராகக் கல்வெட்டிலாகாவில் பதிவு செய யப்பட்டுளது. கல்வெட்டை ஒத்துப் பார்த்துக்கொள்ள அனுமதித்த ஷெ இலாகாதாரர்கட்கு எனது வந்தனம உரியது.

2. மகாராயர்.

3. வல்லின 'ற'கரங்களை இடையினமாகக் கொள்க.

* செகனெப்பரகண்ட ; இழுப்பில்லாத என்பது பொருள்.

4. ஞாயிற்று.

5. பிரதிஷ்டமான.

புரம் ஞானசிகாமணி திரு அநந்தீசுர பண்டிதரான பராசல[1] கோத்தி ரத்து போதாயன சூததரத்து ஆபதுத்தாருணப் பெருமாள் புத்திரன் புழை பொருத்தக் குருக்களுக்கு[2] இன்னுயனார் திருமைத்துக் காணியாக மூப்பது வட்டகையும் தானம் நிருவாகம் இறண்டும் பூசை சைவாசாரம் கோயில நாயகமாட்டேறும

இவ்வாறு பழமலைநாதரைப் பிரதிட்டை செய்த லிங்கா ரெட்டி யாருடைய மூத்த புதல்வரே அண்ணாமலை ரெட்டியாராவர். இவரும் கல்வி கேள்விகளில் வல்லவர். சைவசமயப்பற்று மிகுதியுமுடையவர். தன் தந்தையாரால் கட்டப்பட்ட சிவாலயத்தைப் பரிபாலிக்க உரிமை பெற்றவர். வெள்ளாற்றுக்கு வடக்கிலுள்ள பகுதியைக் காத்து விஜய நகர அரசரது காரியகர்த்தராக விருந்தவர். இச்செய்தி மேற்காட்டிய கல்வெட்டின் பிற்பாகத்தால் உறுதிபெறும். அது வருமாறு:

'இப்பிரம வெளாளாக கோத்துக்கு ஷஷ்டிபால கோத்திரத்து பண்ட குல வல்லகோள லிங்கா ரெட்டியார் புத்திரன் அண்ணாமலை ரெட்டி யாருக்கு முப்பது வட்டம் இரண்டு நிருவாகமும், பொற்பண்டார மாளிகை கூறும் இன்னுயனார் கோயில் ஆதிசண்டேசுர பட்டயமாகக் கட்டளை யிட்டபடியினாலே இதாக நண்டான மன்மனை நந்தைச புநசை இலக்கை படி பிரசாத முதலான சகல சுவந்திர சுவாமியங்களும் அனுபவித்துக் கொண்டு அவரவர்க்கு கோயில் துறைக்கு உண்டான ஊழியங்களும், செய்து முடித்துக்கொண்டு இங்ஙனம் புத்திர பௌத்திர பாரம்பரியமாக சந்திராதித்தவரையும் அனுபவித்துக்கொண்டு வரக்கடவராகவும்— சிவமயம்.'

இந்த அண்ணாமலை ரெட்டியாரே சிவப்பிரகாச சுவாமிகளை ஆதரித் தவராவர். சுவாமிகள் திருவேங்கை யுலாவிலே

'வினைவினாகுப பணூடை யறதத்தின் ப்டிவமித்து வெண்ணவுருக்
கொண்ட விலிங் கையன் குலமைந்தன—உண்ட
படிதாங்கி மாயன்றோப் பாரதாங்கி யாங்கெம்
குடிதாங்கி நல்லிசைமென் கோதை—முடிதாங்கு

கண்ட குலததிற கருதி னிரட்டியாம
பண்ட குலத்தின் பயனுனன்—மணடலிகர்
நல்லகோ லின்று நவைக்கோ லெனச்செயுங்கோல்
வல்லகோ லண்ணு மலைவள்ளல்—மல்லலுறச்
சந்து பொருததித தகுஞ்சீர் கெடாதடுக்கிப்
புந்தி மகிழற் புதவணித்தா—முந்தையோர்
செய்யுள்போற் செய்த திருக்கோயி லுள்ளிருந்தெம்
மையுள் போக்கிற்கும் பரஞ்சோதி'

1. பராசர. 2. பிழைபொறுத்த குருக்கள்.

என்று பாடுவர். இதுகொண்டு வெங்கனூர்க் கோயிற்றிருப்பணி செய்தவர் அண்ணாமலை ரெட்டியார் என்று கூறுவாரும் உண்டு. ஆயினும் அக்கோயிலிற் காணும் மேலே காட்டப்பட்ட கல்வெட்டு இச்செய்தியை மறுக்கின்றது. எனினும் கோயில் கட்டுங்காலத்திலேயே அண்ணாமலை ரெட்டியார் காரியகர்த்தராக இருக்கும் உரிமை பெற்றிருந்தமை கொண்டு தக்க பிராயமுடையவராக இருந்திருத்தல் வேண்டும் என்று கொள்வது பிழையாகாது. கோயிற்றிருப்பணி வேலையையும் தன் தந்தையாரோடு உடனிருந்து கவனித்திருந்தாராதல் வேண்டும் என்று தோன்றுகிறது. அதுவன்றிக் கோயிற் காரியங்களை இவரே நிர்வகித்து வரவேண்டுமென்று இலிங்கா ரெட்டியார் கட்டளையிட்டிருந்ததாலே உலாவிற்கண்ட செய்தி பிறந்துமிருக்கலாம். அடிகள் பிரபுலிங்கலீலை இயற்றிய காலம் கி. பி. 1652. கோயில் கும்பாபிஷேகம் நடைபெற்றது 1623. அப்பொழுதே அண்ணாமலை ரெட்டியார் குறைந்தது முப்பது ஆட்டைப் பருவத்தராயிருந்திருத்தல் வேண்டும். மேலும் அடிகள் காலமாகும்போது அண்ணாமலை ரெட்டியார் இருந்ததாகத் தெரியவில்லை. அடிகளுக்கு முன்னரே ரெட்டியார் சிவலிங்க ஐக்கியமாயினர் போலும். ஆதலாலே அண்ணாமலை ரெட்டியார் தமது முதுமையில் சிவப்பிரகாச அடிகளை ஆதரித்தவராதல்வேண்டும்.

மேலே கூறியவைகளால் அண்ணாமலை ரெட்டியார் இலிங்கா ரெட்டியாரது மூத்த புதல்வரென்பதும், விஜயநகர அரசர்களது காரியகர்த்தரென்பதும், ஸ்ரீ வேங்கடபதி தேவ மகாராயர் காலத்திலும் பின்னும் இருந்தவரென்பதும், வெங்கனூர்க் கோயில் இவரது தந்தையாராற் கட்டப்பட்டதென்பதும் பெறப்படும்.

ச. சோமசுந்தர தேசிகர

# வைத்தியநாத தேசிகர்

மன்னுதென் கமலை வைத்திய நாதன்
பொன்னடிக் கமலப் போதினைச்
சென்னியிற் சேர்த்துநு மதிசிறந் திடவே

என்பது இலக்கண விளக்கம் என்ற நூலின் முகப்பு ஏடுகளிற் காணப்படும் செய்யுள். இச் செய்யுளிற் கண்ட வைத்தியநாத தேசிகர் திருவாரூரிலே பரம்பரைச் சைவாசாரிய மரபிலே தலைவணைக் குடியில் வந்த வன்மீகநாத தேசிகரின் முதன் மனைவியின் புத்திரராவர். இளமையிலே தாயினையிழக்க நேர்ந்தமையாலும், மாற்றாந் தாயினது பராமரிப்புக் குறைவாலும் வைத்தியநாதர் சிறிது துன்பமடைந்து வருந்தினாரென்று அவரது பரம்பரையினர் கூறுவர். ஆயினும் அத்துன்பம் நீண்டநாள் நிலைத்திருக்கவில்லை. அவருடைய தந்தையாரான வன்மீகநாத தேசிகரிடம் கல்விபயின்றவரும், அக்காலத்திலே ஸ்ரீ கமலைவசந்தத் தியாகேசனது அபிடேககட்டளை அன்னதானகட்டளைகளின் விசாரணைக் கர்த்தருமாயிருந்த அகோரமுனிவர்[1] என்பார் வைத்தியநாதரது பரிதாப நிலைமையறிந்து அவரை அழைத்துவந்து தம்மோடு வைத்துக்கொண்டு கல்வி கற்பித்து வந்தார். உணவுக்கவலை யொழியவே, வைத்தியநாதர் தம் காலத்தை வீண்போக்காது கல்வி கற்பதே நோக்காகக் கொண்டார். ஆசிரியராயமைந்த அகோர முனிவரும் தமது குருபுத்திரரைப் பலவிதத்திலும் அன்போடு பாதுகாத்து வந்தனராயினும் கல்வியில் மட்டும் கடுமையுடையவராகவேயிருந்தாரென்று கன்ன பரம்பரைச் செய்தி கூறும். மாணவர் கல்வி பயிலுங்கால் சோர்வுற்றால் ஆசிரியர் தம் கையிலுள்ள கரகநீரைப் பெய்துவிடுவர் என்று கூறுவர். இவ்வாறாகப் பலநாள் கல்வி கற்றுவந்தார்.

அக்காலம் காசிபோந்து கங்கையாடி வருவது பெரும்பேறாகக் கருதப்பட்டகாலம். அகோரமுனிவரரும் காசியாத்திரை செல்லும் நோக்குடையராய் அப்பயணத்திற்கு ஆவன புரிந்துவந்தார். ஒருநாள் தம் மாணாக்கர்க்கு முனிவரர் தமது காசியாத்திரையைக் குறித்துக் கூறுதலும், மாணவராகிய வைத்தியநாதரும் தமக்கு அப்பொழுது திருவாரூரிலே ஒரு பற்றுக்கோடு மின்மையால் தாமும் தமது ஆசிரியரோடு காசிக்கு வருவதாகக் கூறினார். ஆசிரியர் வைத்தியநாதரது இளமையையும் இல்லறவாழ்க்கை நிலையினையும் வழியினது அருமையையும் எத்துணை எடுத்துக் கூறியும், வைத்தியநாதரது மனம் அமைதியுறவில்லை. அதனைக் கண்ட முனிவரரும் மாணவராகிய வைத்தியநாதர் தம்மோடு காசியாத்திரை செல்வதற்கு ஒருவாறு ஒருப்பட்டார்.

1. இவ் அகோர முனிவர் திருக்குடந்தைப் புராணம், திருக்கானப்பேர்ப் புராணம், வேதாரணிய புராணம் என்ற நூல்களின் ஆசிரியராவர்.

'இருவரும் ஒரு நன் முகூர்த்தத்திலே திருவாரூரை விட்டுப் புறப்பட்டு இடையிலுள்ள பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு திரு அண்ணாமலையை யடைந்து ஒரு மடத்திற் றங்கினார்கள். முனிவர் தமது ஆன்மார்த்த பூஜையின் பொருட்டுச் சென்றனர். வைத்தியநாதர் நித்தியக்கடன்களைக் கழித்தவளவிலே தமது பாடபுத்தகத்தைக் கையிற்கொண்டு யோகபட்டை கட்டிய பயிலைப் புகுந்தவர் மெய்ம்மறந்து நின்றார். ஆசிரியர் தமது பூஜையை முடித்துக்கொண்டு வந்து மாணவரைப் பார்த்தார். மாணவர் இருந்த நிலை முனிவர்க்கு எவ்வாறு தோன்றியதோ அது அறிவதற்கில்லை. அவர் வைத்தியநாதரை முறைமுறை வலம் வந்து சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு, இனித் தாம் சீடரும் வைத்தியநாதர் குருமுறைப்படி குருவுமாயினதாகக் கூறிக் குருவுக்குரிய சிறப்புக்களையுஞ் செய்தனர்.

அகோரமுனிவர்க்கும் வைத்தியநாத தேசிகர்க்கும் இதுவரையிருந்துவந்த தொடர்பு வேறுபட்டதால், இனித் தேசிகர் தம்மோடு காசி செல்வது ஏற்றதன்றெனக் கூறியதோடு தமது உடன்சாலை மாணவரும் பிரபுவாயுமுள்ள ஒருவர் திருநெல்வேலியின் கண்ணே இருப்பதாகவும், அவ்விடம் சென்றுறைய வேண்டிக் கொண்டதோடு அவ்வன்பினருக்கு[2] ஒரு கடிதமும் எழுதிக் கொடுத்துத் தேசிகரை ஊராபாக விடுத்துத் தாம் காசி போகச் சென்றார்.

வைத்தியநாத தேசிகர் திரு அண்ணாமலையினின்று புறப்பட்டுத் திருவாரூர் சென்றனர். சிறிதுகாலங் கழித்து, அங்கிருந்தும் புறப்பட்டுத் திருநெல்வேலி நோக்கிச் சென்றார். இடையில் [illegible]றில் அப்பொழுது மதுரையை யாண்ட திருமலைநாயக்கரது காரியகர்த்தராக விருந்த திருவேங்கடநாத ஐயரைச் சந்தித்தார். தேசிகருடைய கல்வித்திறமையையும் அடக்கம் வாய்மை பொறுமை முதலாய நற்குணங்களையுங் கண்ட திருவேங்கடநாதையர் தேசிகரைத் தமது மக்களுக்குத் தமிழாசிரியராக அமர்த்தினர். தாம் பாடம் கற்பித்துவரு நாளிலே, இலக்கண பாடஞ் சொல்லிவருகையில் தாம் கற்ற நன்னூலும் சைன முனிவராய மயிலைநாதருரையும் பல இடங்களில் தொல்காப்பியர் கருத்துக்கு மாறுபடுவது கண்டு இயன்றவரை நன்னூற் சூத்திரங்களை வைத்துக்கொண்டு வேண்டிய விடங்களிற் றிருத்தியும் புத்துரை வகுத்தும் பாடம் போதித்து வந்தாரென்று கூறுவர். அதுவே நாளடைவில் இலக்கணவிளக்கம் என்ற பெயர் பெற்றது.

வைத்தியநாத தேசிகர் மலையாளஞ் சென்று அந் நாட்டு அரசரின் மேற் பல பிரபந்தங்கள் பாடி, அவராற் பல சன்மானங்களும சில ஊர்களும் முற்றூட்டாகப் பெற்றதோடு அவரது அவைக்களத்தினரால் 'ஓதும் பிரபந்தங்கள்............கமலைவரு வைத்தியநாத குருவே' எனத் துதிக்கப்பட்டார். பின்னர் வடநாடு சென்று திண்டிவனத்தை

2. இவ்வன்பினர் யாவரென இதுபொழுது தெரிதற்குரிய சான்றுகள் கிடைத்தில.

